தவர் தமது ஊர் தென்திருப்பேரை என்று கூறியுள்ளார். ஸ்ரீராமப்பாவலர் என்பவர் தமக்குச் சாகாத சந்ததி தந்தருள வேண்டும் என்று செய்த பிரார்த்தனையே 'சந்தானப் பத்து' என்ற இனிய நூலாகும். குழைக்காதர் மீது இரண்டு கலம்பகங்கள் எழுதப்பட்டுள்ளன. அவை 'குழைக்காதர் கலம்பகம்', 'திருப்பேரை கலம்பகம்' ஆகும். குழைக்காதர் மீது பாடப்பெற்ற சிறந்த சிற்றிலக்கியங்களில் ஒன்று குழைக்காதர் பாமாலையாகும். இது 103 பாடல்களைக் கொண்டது திங்கள் ஒன்றாகச் சிறையிருந்த நாராயண தீக்ஷதர் பூமாலை கட்டி வழிபட இயலாத நிலையில் குழைக்காதருக்குச் சூட்டிய மாலை இப்பாமாலை ஆகும். இதனைச் 'சிறை தந்த செல்வம்' என்றும் போற்றுவதுண்டு, இதனைத் தவிர மகரக் குழையன் மீது எண்ணற்ற ஊஞ்சல் பாட்டு, தாலாட்டு, கிளிக்கண்ணி, கீர்த்தனைகள் இராகத்துடன் இசைத்துப் பாடுவதற் கேற்றபடி எழுதப்பட்டுள்ளன. திரு. பி. ஸ்ரீ யின் தகப்பனாரான கவி பிச்சுவைய்யங்கார் எழுதிய இரத பந்தனச் செய்யுள் ஒன்று மண்டப முகப்பினை இன்றும் அலங்கரிக்கிறது.

## இரத பந்தனம்

இணையொத்து வாழ்வோர்க் கிடரைத் தவிர்க்கும்
பணைகாண் சீர்செல்வம் பாலிக்குங் குணமீந்த
வாதழைக்கு மெல்லோர்க்கும் ஆந்தன
மிப்பார்வாழ்
சுவாமி குழைக்காதர் துணை.

— கவி பிச்சு அய்யங்கார்

கல்வெட்டும் காலமும் :

தென்திருப்பேரை கோயிலில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவற்றில் சிலவற்றை இந்திய அரசின் கல்வெட்டு ஆராய்ச்சித் துறையினர் எடுத்தெழுதிப் பதிப்பித்துள்ளனர். அவற்றில் கிடைத்த கல்வெட்டு ஒன்றில் பின்வருமாறு காணப்படுகின்றது.

இராசகேசரி பன்மரான செயங்கொண்டான் தஞ்சாவூரிலிருந்து ஆண்ட முதலாம் இராச இராச சோழனின் 26-வது ஆட்சியாண்டில் (கி.பி. 1010 - 1011) திருவழுதி வளநாட்டில் கைதவ சதுர்வேதி மங்கலத்து மகாசபையார் குடநாட்டு கலித மங்கத்து மாதவன் உதயதிவாசுரன் என்ற பிராமணனுக்கு நிலம் விற்றுக் கொடுத்தார்கள். (கல் வெட்டு எண். 283 - 1949).

இக்கல்வெட்டு 11-ம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் வழங்கி வந்த வட்டெழுத்தால் பொறிக்கப்பட்டிருக்கிறது. இக் கல்வெட்டுச் செய்திக்கும், கோயிலுக்கும் உள்ள தொடர்பு தெளிவாக இல்லை. இராச ராசனுடைய ஆட்சிக்காலம் குறிக்கப்பட்டிருப்பதால் இத் திருக்கோயில் வரலாற்றுச் சிறப்பும், தொன்மையும் பெற்றிருப்பதை காண்கிறோம்.

பெருமாள் : மகர நெடுங்குழைக்காதர்
தாயார் : குழைக்காதுவல்லி
விமானம் : பத்திர விமானம்
தீர்த்தம் : சுக்கிர புஷ்கரணி

வீற்றிருக்கும் திருக்கோலம்
கிழக்கே பார்த்த சந்நிதி

சுக்கிரன், பிரமன், ஈசானியருக்கும், ருத்திரருக்கும், பிரத்யக்ஷம்.

குழைக்காதர் திருவடிகளே சரணம்.

எழுதியவர்.

திருநெல்வேலி — திருமதி பத்மஜா அனந்தராமன்,
6 – 6 — 92.

ஸ்ரீ



'வெள்ளைச் சுரிசங்கொ டாழி யேந்தித்
தாமரைக் கண்ணனென் நெஞ்சி னூடே
புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர்!''

— திருவாய்மொழி

ஸ்ரீ

# குழைக்காதர் கலம்பகம்

## நூல் முகம்

தமிழ் மொழியிலுள்ள தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களில் ஒன்று கலம்பகம் என்னும் பிரபந்தம் ஆகும். கலவைச் சுவை நிரம்பிய இப்பிரபந்தம் சற்றுப் பின்னர் தோன்றிய இலக்கியம் எனலாம். கலம்பகம் என்ற பெயரே இப்பிரபந்தத்தின் இயல்பை விளங்கச் செய்வதாயிருக்கிறது. இச்சொற்குச் கலவை என்பது பொருள். பல வகையான மலர்களைச் சேர்த்துக் கட்டிய மலர் மாலையினைக் கதம்பம் என்று கூறுவதுண்டு. இது 'கதம்பகம்' என வடமொழியில் வழங்கப் பெறும். பல்வேறு வகையான நிறமும், உருவமும், மணமும் கொண்ட மலர்களால் தொடுத்த மலர் மாலை போன்று இப்பிரபந்தமும் பல்வேறு வகைப் பாக்களையும், பொருள் களையும், சுவைகளையும் கொண்டு வரும் என்னும் உவமை நயம் பொருந்தவே இது 'கலம்பகம்' என்னும் பெயர் பெறுவதாயிற்று.

'களி வண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கலந் தொடையல் ... ... ...'

என்ற தொண்டரடிப் பொடியார் பாத் தொடரால் இது புலப்படும்.

தமிழில் வைணவச் சார்புடைய கலம்பகங்கள் மிகக் குறைவு தென் தமிழ் நாட்டில் நவதிருப்பதிகளுள் ஒன்றான தென் திருப்பேரை நம்மாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட வைணவத் தலமாகும். இங்கு எழுந்தருளியிருக்கும் பிரானின் திருநாமம் ஸ்ரீ மகராயுத கர்ண பாச : தமிழில் மகர நெடுங்குழைக்காதர் என்று வழங்கப்படுகிறார். இப்பதியின் தனிச் சிறப்பு என்ன

வென்றால் இங்கு இரண்டு கலம்பகங்கள் உள்ளன. ஒன்று அபிநவ காளமேக அநந்த கிருஷ்ணையங்கார் எழுதி வெளியிட்ட 'திருப்பேரைக் கலம்பக' மாகும். பிறிதொன்று தான் 'குழைக்காதர் கலம்பகம்' இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் பற்றிய விவரங்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. இதுவரை அச்சிடப்பட்டதாகவும் தெரியவில்லை. எங்கள் வீட்டில் கண்டெடுக்கப்பட்ட கைப் பிரதியின் படிவந்தான் இங்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. 'ஏற்கனவே ஒரு கலம்பகம் இருப்பது தெரிந்தால் இந்த திருப்பேரை கலம்பகத்தை எழுதியிருக்க மாட்டேன்' என எனது தாத்தா அநந்த கிருஷ்ணையங்கார் கூறியதுண்டு. தெரிந்திருந்தால் 26 - உறுப்புக்களைக் கொண்ட 'திருப்பேரை கலம்பகம்' நமக்குக் கிடைத்திருக்குமா?

"பல்பூ மிடைந்த படலைக் கண்ணி"

(பெரும்பாண் ; 174)

என்ற வரிக்கு 'பல பூக்கள் கலந்து நெருங்கிய கலம்பக மாகிய மாலை' என நச்சினார்க்கினியர் உரை வகுத்-துள்ளார். யாப்பெருங்கல விருத்தியில் அடிகள் எழுத்து ஒவ்வாது வெவ்வேறு வகையில் அமைந்து வரும் கலிப்பா விற்கு 'கலம்பகக் கவி' என்ற பெயர் தரப்படுகிறது. (யாப். வி : 95) இவையும் இப்பெயர் காரணத்தை இனிது விளக்குகின்றன.

'கலம்பகம்' என்ற சொற்றொடரினை கலப்பு + அகம் எனப் பிரித்துச் சொற்பொருள் கூறுவதுண்டு. கலப்பு என்பது கலம்பு என நின்றது கலம்பகத்திற்கு உறுப்பாக அமைந்த பல துறைகள் கலத்தலைத் தன்னகத்தே கொண்ட நூல் எனப்பொருள் விரிப்பதுண்டு. சிலர் பன்னிரண்டு மரக்கால் என்னும் பொருள்படும் கலம் என்னும் சொல்லும், கடவுளின் ஆறு குணங்களைக் குறிக்கும் 'பகம்' என்னும் சொல்லும் உம்மைத் தொகை யாகச் சேர்ந்து 18 உறுப்புக்களையுடைய நூல் என இப் பெயர் காரணப் பெயராயிற்று என்பர். புய வகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம்,

குறம், மறம், பாண், களி, சிந்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், என்னும் பதினெண் உறுப்புக் களைக் கொண்டு பலவகைப் பாக்களும், பாவினங்களும் விரவிவர, பல்வகை நயங்களும் செறிந்து வர அந்தாதித் தொடை அமையப் பாடப்படுவது கலம்பகம் ஆகும். நாளடைவில் பதினெட்டு என்ற வரையறையைத்தாண்டி இருபத்தாறு இலக்கிய உறுப்புக்கள் வரை கலம்பகத்தில் கையாளப்பட்டிருக்கின்றன. தெய்வங்களையும், மன்னர் களையும் தலைவர்களாகக் கொண்டு இப்பிரபந்த வகைகள் தோன்றின தெய்வத்தைப் பொருளாகக் கொண்டு எழுந்த கலம்பக நூல் பெரும்பான்மையானவை யாகும். ‘ அழகர் கலம்பகம் ’ ‘ திருப்பேரைக் கலம்பகம் ’ என்றார் போன்று தெய்வத்தினைப் பாட்டுடைத் தலைவ-னாகக் கொண்டதுடன், தலத்தின் பெயரால் ‘திருவரங்கக் கலம்பகம் ’ ‘ திருவேங்கடகக் கலம்பகம் ’ போன்றன எழுதப்பட்டன. நந்திக் கலம்பகம் போன்று பிரபந்தத் தலைவர்கள் பெயரில் எழுதப்பட்ட கலம்பகங்களும் உண்டு. கி பி. 9-ஆம் நூற்றாண்டு துவங்கி இன்று வரை எண்ணற்ற கலம்பக நூல்கள் வெளி வந்துள்ளன. பிற்காலத்தில் கலம்பக உறுப்புகளான அம்மானை, தூது ஊசல், குறம் போன்றவை தனித் தனி நூலாக விரிந்தன.

முதன் முறையாக அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ள ‘ குழைக்காதர் கலம்பகம் ’ இனிய எளிய 101 செய்யுட் களைக் கொண்டது. இது காப்புச் செய்யுளுடன் துவங்கு கிறது. காப்பு என்றால் காத்தல் என்று பொருள். இது கவி தாம் எடுத்துக் கொண்ட நூல் இனிது முடியும் பொருட்டு ஆன்றோர் வழக்கப்படி வழிபடு கடவுளை யாவது, ஏற்புடைக் கடவுளையாவது வணங்குவது ஆகும். இது காத்தருளும் கடவுள் பற்றிய வணக்கத்துக்கான தொழிலாகு பெயர் ஆகும் அடியார்களைப் பற்றிய நூல் களுக்கு கடவுள் வணக்கம் கூறுவது போல கடவுளைப் பற்றிக் கூறும் நூலுக்கு நம்மாழ்வாரைக் காப்புச் சொல் கிறார் ஆசிரியர். இந்நூலின் சொற்கள் பலர் காதில் போட்டுப் பார்த்து கனிவு பெற்றிருக்கின்றன என்பதனை இக்கலம்பகத்தின் முதல் வரியே காட்டுகிறது.

" செவிதோறுங் கனிந்த செந்தேன்
தெளிந்த சொல் ......... "

( செவிதோறும் கனிந்த சொல், செந்தேன் தெளிந்த சொல் ' என்று கூட்டுக. )

புவியிலுள்ளோர் எடுத்துச் சொல்லிப் புகழ்கின்ற பேரையின் புகழினைப் பாடுவது இக்குழைக்காதர் கலம்பமாகும். பராங்குசன் எனப்படும் நம்மாழ்வார் பிற சமயங்களாகிற யானைகளுக்கு அங்குசம் போன்றவன். ஆழ்வாரை யானையென்று உவமித்தற்கேற்ப கவிமதம் பொழியும் ஞானமாகிற அங்குசத்தை உடையது என்றும் கூறினார். பாகனைப் பற்றித் தொடர்கிறது. யானை விலங்கறுத்த பாகனல்லவா? பாகனென்று சொன்னதற் கேற்ப புள்ளின் பாகனென்று கூறினார். இக்கலம்பகமும் பாகன் புகழைத் தானே சொல்கிறது. களிறு தானே காக்கும் என்ற தனிப் பொருளும் காண்க

காப்புச் செய்யுளிற்குப் பிறகு அவையடக்கம் காணப்படுகிறது. நூலாசிரியர் கற்றோர் குழுமிய அவை யில் தம்மியல்பை வெளியிட்டு அடங்கிப் பேசுதல் வழக்கம். எதற்காக இந்நூலைச் செய்தார் என்ற வினா எழும்பலாம் உலகம் தழைக்கவும், மன்னர்கள் நீதி நெறி தவறாமல் ஆட்சி புரியவும், வேதங்கள் நிலை பெறவும் இந்நூலினை எழுதினார்.

"குழைக்காதர் கலம் பகமென் றொரு பேர் நாட்டிக்
கொழித்த தமிழ் சுழித் தெடுத்துக் கூறும் பாடல் "

என்று கூறுவதின் மூலம் ஆசிரியர் தமது தமிழ்ப் பற்றே நூலினைப் படைத்ததற்குத் தலையாய காரணம் எனக் காட்டுகிறார். இந்நூலில் அவரது தமிழ் பற்று கொழிக் கின்றது. தமிழ்ப்பாடல்கள் சுழித்தெழுகின்றன ! இந்நூலின் கண் சொற்குற்றங்கள் நிரம்பி வழிகின்றன. செய்யுள் உறுப்புகளாகிற சீர், தளை, அடி, தொடை போன்றவற்றில் எத்தனையோ பிழைகள் உள்ளன. அவை சுட்டிக் காட்டாமலே புலப்படுகின்றன. தமது கவிதை ' ஒரு பொருட்கும் ஒவ்வாது; காசு பெறாது '

என மிகத் தாழ்மையுடன் நூலாசிரியர் கூறிச் செல்வதைக் காணலாம். ஆனால் அவர் மகரக் குழையனின் திருநாமத்தை மாண்புடன் அல்லவா கூறுகிறார்.

‘ ஒரு பொருட்டு மொவ்வாத தேனினுமென் சொற்
பிழைக்காக இகழ்வரோ பெரியோர் ஞானப்
பெருமான்றன் திருநாமம் பெற்றக் காலே ’’

ஒருவரும் தனது சொல் புன் சொல் எனச் சொல்ல மாட்டார்கள் என நம்புகிறார் ஆசிரியர். ஏனென்றால் படிப்பவர் தம் பெருமையும் அதில் தானே அடங்கியிருக் கிறது. கற்றறிந்த பெரியோர் முன் எவ்வளவு தன் அடக்கத்துடன் பேசுகிறார் என்பது புலனாகிறது.

பாட்டியல் விதியின்படி பூ என்னும் மங்கலச் சொல்லுடன் “குழைக்காதர் கலம்பகம் ’’ மங்களகரமாகத் துவங்கி இனிய எளிய ஆற்றொழுக்கு நடையில் கலம்பக உறுப்புக்கள் விரவிவர 100 செய்யுட்களைக் கொண்டு விளங்குகிறது. நூலின் இறுதியில் ஒரு வாழ்த்துப் பாடலுடன் நூல் முடிவடைகின்றது. இந்நூல் முழுவதை யும் கற்றுணர்ந்தால் புலவர் பெருமாளிடம் கொண்ட ஈடுபாடும், தமிழின் மீது கொண்ட பற்றும், இத்திருப் பதியின் மீதுள்ள பக்தியும் நன்கு புலனாகின்றன. “பேரை மால் குழைக்காதர் ’’ ‘ மகரக் குழையனே ’ ‘ பேரை வாழ் முகிலே’ என்று பலவாறு எம்பெருமானை விளித்துப் பாடுகிறார். இராமாவதாரத்திலும், கிருஷ்ணாவதாரத் திலும் நூலாசிரியர் கொண்ட மிகுந்த ஈடுபாட்டினை இக் கலம்பகம் எடுத்துக் காட்டுகிறது.

‘ கானகம் புகுந்து விராதனை வதைத்துக்
கவந்தனைக் கவர்ந்து சூர்ப்பனகை
கரிய மூக்கரிந்து கரனுயிர் குடித்துக்
கருங்கடல் வழிபடக் கடந்து ’’

என இராமபிரானின் சாதனைகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார். சகடம் உடைத்தவன், மருதிடைப் பாய்ந்தவன், நரசிம்மாவதாரம் எடுத்தவன், குறள்

வடிவானவன், இராவணனை வென்றவன் ... என் எல்லாமே மகரக் குழையனே என மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறார். மேலும் அப்பிரானைப் 'பேரேசர்', 'வழுதித் திருநாடன்' எனவும் போற்றிப் பரவுகின்றார். அப்பிரான் எழுந்தருளியிருக்கும் பதியானத் தென் திருப்பேரையின் செழிப்பினை அடிக்கடி நினைவு கூர்கிறார் :

" மேழி வலம் புரிபழனப் பேரை நாட்டில் " என்றும், (19)

" வாளைப் பகடு புகுந்தழக்கும் வயல் சூழ்
வழுதித் திருநாடன் " (17)

என ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஆசிரியர் தாமிரபரணி நதியினையும் பாராட்டத் தவறவில்லை.

" வணிகர் போற் கடை நிலம் புரக்க
வருபெரும் பொருநைத் துறைவனே "

அந்த நதியின் தென் கரையிலிருக்கும் இப் பேரையினைத் 'தமிழ்ப் பேரை' 'அறிபேரை' 'வண்டமிழ்ப் பேரை' எனப் பலவாறு போற்றுகின்றார். மேலும் இப்பதியின் பெருமை வாய்ந்த தலவகார சாம வேதிகளைக் குறிப்பிடத் தவறவில்லை;

'நூற்றெட்டு வேதியர் தம் புகழ் பாடி யாடீரூசல்' (19)

மேலும் இங்கிருக்கும் ஆடவரைப்பற்றிக் குறிப்பிடுகையில் திருக்குறள் பாணியினைப் பின்பற்றுகிறார்.

" கானார் கருங்குழலார் காமத்தின் பால் மறந்து
பேரை அறத்தின் பொருட்டு பொருட்பாலே" (44)

அங்கிருக்கும் ஆடவர் காமத்தை மறந்து இல்லறத்தை நடத்தப் பொருள் தேடிச் சென்றனராம். திருக்குறளில் காணப்படுவது போல் காமத்துப் பால் சிறிது; அறத்துப் பால் நடுத்தரம்; பொருட் பால் அதிகமாக இந்நூலிலும் இடம் பெறுகின்றது.

இந்நூல் கற்றோரும், மற்றோரும் படித்து மகிழத் தக்க விதத்தில் சொற் சுவை, பொருட் சுவை, பக்திச் சுவை சொட்டச் சொட்ட அமைந்துள்ளது. இதனைப் படிக்கும் போதெல்லாம் அந்த ஊர் பேர் தெரியாத புலவரின் புலமைத் திறமை, கவிதையாற்றல், கற்பனை வளம் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. அணிகளும், கவிதை நயங்களும் விரவி நிற்க ஆசிரியர் கூறுவது போன்று, 'பாகையும் பிழிந்து தேனையுங் கவர்ந்து பாலுடன் கலந்த மொழி சேர்'ந்த நூலே இக்குழைக்காதர் கலம்பகமாகும். நலமிகும் பெருஞ்சுவையினை நமக்கு இனிதளிக்கும் குழைக்காதரை வாழ்த்தி வணங்குவோ-மாக :

"வாழி புகழ் பேரை மகரக் குழை வாழி
வாழி தமிழ் நூற்றெட்டு மாமறையோர் - வாழியவே"

# குழைக்காதர் கலம்பகம்

## காப்பு

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

செவிதொறுங் கனிந்த செந்தேன்
        தெவிந்தசொல் தவறுண் டேனும்
புவிபுகழ்ந் தெடுத்த பேரைப்
        புகழ்க்கலம் பகத்தைக் காக்க!
பவவிலங் கறுத்த புள்ளின்
        பாகனைத் தொடர்ந்து பற்றிக்
கவிமதம் பொழியும் ஞானப்
        பராங்குசக் களிறு தானே;

## அவையடக்கம்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மழைக்காவல் புரந்துலகம் தழைப்ப நீதி
        மன்னவர்செங் கோலளிப்ப மறைநூல் வாழக்
குழைக்காதர் கலம்பகமென் றொருபேர் நாட்டிக்
        கொழித்ததமிழ் சுழித்தெடுத்துக் கூறும் பாட
லுழைக்காவ லடிதொடைசீர் தளைமா றுடல்
        ஒருபொருட்டு மொவ்வாத தெனினு மென்சொற்
பிழைக்காக விகழ்வரோ பெரியோர் ஞானப்
        பெருமான்றன் திருநாமம் பெற்றக் காலே

## நூல்

### வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

பூமாது நலம்பெருக்கப் புவிமாது வளஞ்சுரப்பத்
தேமாலை புனைந்தேத்தித் தேவர்களும் தலைகுனிப்ப
நீதியரும் பிக்கருணை நிறைபுனலா நூற்றெட்டு
வேதியரும் திருப்பேரை வியனகநூற் றழைத்தோங்கக்

கவிச்செல்வர் மூதறிவிற் கனிந்துருகும் பழம்புலவர்
செவிச்செல்வந் தவறாது செந்தமிழின் தேனிறைப்ப
வரிவளைக்கை யரம்பையர்கள் மலர்க்கவரி யெடுத்தி
யக்கத்

தருமலர்ப்பூந் தாதருந்தித் தமிழ்த்தென்ற லடிவருட
வெளியகத்தே நின்றுயர்ந்த வீங்குமணித் தூணிரையின்
ஒளிகெழுமி யிருள்துடைத்த வோலங்கு மண்டபத்துட்
காய்சினத்த கோளரியின் கழுத்துளக்கச் சுமந்தேந்தும்
ஆசனத்துக் கடவுளருக் கரசெனவீற் றிருந்தனையே

## இஃது பன்னீரடித்தரவு

கோதுபிடித் தரித்தமுதங் கொடுத்தநீ யளைகவர்ந்து
சூதுபிடித் தடிச்சுவடு தொடர்ந்துபிடித் தசோதையெனு
மாதுபிடித் தடித்தவுடன் மண்ணையுண்ட வாய்மலர்ந்து
காதுபிடித் தழுதுமலர்க் கைபிடிக்க நின்றனையே

பெருவிருந்தா யொருவரைப் பிறந்துவளர்ந் தெதிர்ப்
படுமுன்
னருகிருந்த மதலையைமற் றவுணனழித் திடுமென்றே
திருவுளந்தான் விரைவிரைந்து சிறுபொழுது
மொருவயிற்றிற்
கருவிருந்து வளராமற் கற்றூணிற் பிறந்தனையே.

விரிகடலும் புவியுமுண்டு விசும்பளக்க நின்றுயர்ந்து
தரும்பிரம னடிவீழ்ந்து தலைதாழுந் தன்மையினால்
பெருகிவரும் பிரளயமுன் பேருருவம் போன்றதென்னே
திருவுருவ மீனாகிச் செலுவிலெடுத் தடக்கினையே

## இவை மூன்றும் நாலடித்தாழிசை

பயிரவி யெனவரு படுகொலை யலகையின்
உயிரையு முலையுட னொருவழி பருகினை
பிடியென நொடியினிற் பிறையெயி னருடிபட
வடிமத கரியொடு வலிகொடு பொருதனை
ஒருபத சிரமொடு மிருபது கரமுடன்
பருவரை புறமிடு பரிபவ மருளினை

இதுபொரு ளிதுதவ மிதுகதி யெனமுது
சதுமறை படவற சமயமு மருளினை.

இவை நான்கும் ஈரடி அராகம்

மலைகுனிய விசும்பளக்கு மதிவிலங்கை வழிதிறப்பச்
சிலைகுனியப் புயநிமிரத் திருச்சரமொன் றெடுத்தனையே
மூவடிகேட் டீரடியான் மூவுலகு மளந்தசெழும்
பூவடியிற் பிறந்த கங்கைப் புனலாட நின்றனையே.

இவையிரண்டும் ஈரடி அம்போதரங்கம்

துட்டவா ளரவவடந் துவக்கிவரை திரித்தனையே
வட்டவான் குறளாமை வடிவெடுத்துக் கிடந்தனையே
முட்டவான் முகடதிர முழங்குகடற் கடைந்தனையே
பட்டவா ரமுதமரர் பசிக்குவிருந் தளித்தனையே.

இவை நான்கும் நாற்சீரடி அம்போதரங்கம்

மருதொடு சகட மொடித்தனை மணிமுடி யரவி
னடித்தனை
பருவரை நிமிர வெடுத்தனை பரிமள தூளப முடித்தனை

இவை நான்கும் முச்சீரடி அம்போதரங்கம்

மயலு மறிவுநீ மலரு மணமுநீ யியலு மிசையுநீ
யெளிது மரிதுநீ
உயர்வு மிழிவுநீ யுடலு முயிருநீ புயலு மழையுநீ
புறமு மகமுநீ

இவையெட்டும் இருசீரடி அம்போதரங்கம்

எனவாங்கு - இது தனிச் சொல்

அரும்பவிழ் குவளையுஞ் சுரும்பவிழ் குமுதமும்
கருங்கொடி வள்ளையும் கமலமு மலர்ந்து
கண்ணும் வாயும் வண்ணவார் குழையும்
திருமுகச் செவ்வியு மொருமுகப் படுத்திக்
கண்டவர் துவளுங் காட்சியிற் றுவன்றி
கலங்கிளர் மணிநிறை நன்னீர்ப் பண்ணை

பொலங்கொடி மகளிரிற் பொலிந்த பேரையுண்
மகரக் குழையன் மலரடி நோக்கி
யுச்சியிற் றெழுதகை யுரியவ் ருளரேல்
வச்சிரத் தடக்கை வருபெரு மன்னரிற்
சிறந்து விதிப்படி செங்கோ லடாத்தி
மதிக்குடை கவிப்ப மண்ணுமா கமுமே.

இது பன்னீரடி நிலை மண்டிலவாசிரியச் சுரிதகம்

நேரிசை வெண்பா

2. மாகவலைப் பட்டழிந்து மங்கைமார் தங்களனு
போகவலைப் பட்டமனம் போதாதோ- நாகவணைக்
கொன்புரக்கு நேமிக் குழைக்காத ரேயடியேற்
கன்புரக்கு மோவொருகா லம்.

கட்டளைக் கலித்துறை

3. ஒருகை முகக்குஞ் சரஞ்சொன்ன பேரென் றுரைக்கும்
பொற்கா
தருகை முகக்கு மயில்விழி யீரருட் பேரையின்மான்
முருகை முகக்கும் பசுந்தண் டுழாயென்று மொய்
குழலச்
சருகை முகக்கு மிருக்குமுள் ளாவி தழைக்குமென்றே

பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

4. தழைத்தெழுங் கிரணப் பனிநிலா மதியந்
தடங்கடற் பரிதியென் றுதிக்கும்
தமிழுடன் பிறந்த மந்த மாருதமுந்
தழற்குழம் பெடுத்தெடுத் திறைக்கும்
குழைத்தகுங் குமச்செங் களபலே பனமுங்
கொதித்துயிர் குடிக்குமென் னளவிற்
கொடுவினை விளைந்த காலநல் லனவுங்
கொடியவா மென்பதின் றறிந்தேன்.
கழைக்குலந் தடிந்து சந்தனந் திமிர்ந்து
காழகிற் குழாமுறித் தெதிர்ந்து
கரிமுக மருப்புங் கவரியுஞ் சுமந்து
கனகமுந் தரளமுங் கொழித்து

மழைக்குலம் பிளிறு நெடுஞ்சுரங் கடந்து
வணிகர்போற் கடைநிலம் புரக்க
வருபெரும் பொருனைத் துறைவனே குவளை
வளைவயற் பேரைமா தவனே.

எழுசீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

தவசரியை குரியையிது தவிரவினை கொலை களவு
தனைநினையு மறிவிலி யைமா
கவலைபடு விகடபக டனையகப டனையுனது
கழலிணைக ளடிமை கொளுவாய்
நவமணியு மலர்மகளு மிளமதியு மதகளிறு
நறைகமழு மமுது மெடவே
திவலையெறி கடல்கடையு நிகரில்முகில் வணவமரர்
தெளியுமரு மறைமு தல்வனே.

சந்தத் தாழிசை

6. மறைமுடித் தலையி லுறமிதித் தபத மருதிடைத்
தவழு மாயனார்
வழுதிநா டர்மக ரக்குழைக் கடவுள் மழைகொழித்
தொழுகி யருவியாய்
நிறைமுடித் தலையி லருவிகுப் புறநி லாவுதித்
தொழுகு வெற்பனே
நீயளித் தவிவை வேயின் முத்தமென நிச்சயப்பட
மொழிந்த தேன்
பிறைமுடித் தலையில் வடியவிட் டதொரு பின்னல்
பட்டசடை யில்லையே
பிணையெ டுத்ததிலை திரிபு ரத்தையழல் பிழிய
விட்டநகை யில்லைமா
கறைமுடித் தமிட றில்லை முக்கணொடு கரது
பாலமிலை யெங்கள்மால்
கழலினைத் தொழ மறந்த தாலெமர்கள் கைவிசக்
கடவ தாகுமே

### சந்த விருத்தம்

7. ஆகமொன் றிரண்டு கூறுகண்டு பண்டை
யாடகன்ற னங்க மடுபோர்
வாகைவென்றி கொண்டு பேரைவந்த கொண்டல்
மாயவன் றுயின்ற கடலே
பாகையும் பிழிந்து தேனையுங் கவர்ந்து
பாலுடன் கலந்த மொழிசேர்
கோகிலங்க ளின்றென் னாவிமென்று தின்று
கூவுகின்ற தன்பர் குறையே.

### கட்டளைக் கலித்துறை

8. குறைக்கொழுந் தாயமு தின்கொழுந் தாரை
கொழிக்குமந்திப்
பிறைக்கொழுந் தார்மதிட் பேரைப் பிரான்தம்பி
பின்வரவென்
முறைக்கொழுந் தாவெனு மென்மொழிச் சீதை
முலைமுயங்கி
மறைக்கொழுந் தாயன்று கைம்மாறு செய்தனன்
வானவர்க்கே.

### வண்ண விருத்தம்

9. வானவர் தானவர் மாமனு ஜாதிகள் வாழ்வது
சாவதுமேல்
வானுல காள்வது கீழ்நர காள்வதுன் மாயையி
னாலலவோ
ஏனமு மாயொரு வாமன னாகிய ராமனு மானவனே
ஞானவ ரோதய பேரைய ராதிப நாரண காரணனே.

### சந்த விருத்தம்

10. கார ணங்குறி யாய்வ ழங்கிவள் காதன் மங்கையரே
வார ணந்தனில் வீதி வந்தனன் மாலை தந்திலனே
நார ணன்ஜக பூர ணன்றிரு ஞான சிந்தனையால்
ஆர ணம்புகழ் பேரை யம்பதி யாழி யம்புயலே.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

11. ஆழி மாதவன் பேரை மாலளந் தவனி யுண்டவன்
பவனி கண்டபின்
தோழி மீரவன் துளப மாலையென் துணைமு
லைக்கிடார் குழல்மு டிக்கிலார்
ஊழி வேர்வீழுங் கங்கு னட்டதும் உடுப திக்குவே
றழல்கொ டுத்ததும்
கோழி வாயையுங் கூவொ ணாமல்மண் கூறு
கொண்டதும் கொடிய தாயரே.

### நேரிசை வெண்பா

12 ஏடவிழுங் கண்ணிக் கிரப்பா ளவள் கலைநாண்
கூடவீழுங் கண்ணீர் குறையாதோ - மாடமதில்
வீதிமக ரக்குழையும் வெண்மதியுந் தோய்பேரை
நீதிமக ரக்குழைய னே.

### கட்டளைக் கலித்துறை

13 குழைத்திருப் பாரமு தக்கனி வாயிற் குழல் பதிக்குங்
கழைத்திருப் பாலிசை கண்டருள் வோர்குழைக்
காதர்நன்னாட
டிழைத்திருப் பார்மணற் கூடலென்றாலு மிறப்
பதன்றிப்
பிழைத்திருப் பாருமுன் டோவென்பர் சூள்பொய்த்த
பின்னையுமே.

### தாழிசை

14 பின்னை யைத்தழு விப்பு ணர்ந்தருள் பெற்ற
செங்கனி வாயிர்னா
பெருமி தத்தமிழ் முறைகொ ழித்தறி பேரை
யம்பதி யன்னமே
யன்னை யிப்படி மலர ணைக்கு ளணைத்த கையி
னெகிழ்த்துவே
றடைகொ டுத்த கபாட நீவியடிச்சி லம்பொழி
யாமலர்

முன்ன டித்தெரி யாதி ருண்டு முகிழ்ந்து கண்புதை
கங்குல்வாய்
மூளரி யம்பத நோவ வன்பினில் மூத றிந்தவர்
போலவந்
தென்னை யிப்படி வாழ வைத்தது மின்ப மோகநல்
வாழ்வுபற
றியான்ம னுக்கிலு நான்ம றைக்கும திப்பி
றப்பினி லில்லையே.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

15 ஏது காரணத் தெவர்க ளேறுமற் றிழிகு லத்தெழும்
புலை ரேனுமுட்
சாதி பேதமற் றவர்கள் மிச்சிலைத் தருவ ராயினும்
புனித வாழ்வுதா
னாத லாலருட் பேரை நாரணர்க் கடிமை யானவுத்
தமர்ச ரோருகப்
பாத தூளிபட் டுலகம் வாழ்தலிற் பரவு வார்பதத்
தளவி லாததே

### தரவு கொச்சகம்

16 அளவறியாப் புனலிடைப்பட் டழுந்தினர்போ
லணியிழையீர்
விளவறியாப் பேதைமயல் வெள்ளத்தி லழுந்துவளேற்
களவறியாத் தயிர்நுகர்செங் கனிவாயர் மணிப்
புயத்திற்
றுளவறிவாள் பின்னையொன்றுஞ் சொலவறிய
மாட்டாளே.

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

17. ஆளைப் பொருது கயங்கலக்கி யடியிற் படிந்து
மதகிடிய
வாளைப் பகடு புகுந்துழக்கும் வயல்சூழ் வழுதித்
திருநாடன்
ருளைத் தொழுது பசுந்துளபச் சருகுக் கிரந்து
மடவீர்மா

றோனைக் கருதி மடலெழுதத் துணிவாள்
விரைகொன் றறியாளே.

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

18 அறிவி லேனொடு மேய நீதியி னடைவி லேதிரியேன்
நெறியி லேனுறு கதியி லேறுனை நினையு
மாறுளதோ
யிறைவ னேமறை முதல்வ னேதொழு மெமது
நாயகமே
மறுவி லாமர புடைய பேரையில் மருவி வாழ்முகிலே.

ஊசல் - கலித்தாழிசை

19 வாழிவலம் புரிந்துநெடுங் குழைக ளாட
மலர்க்காந்தள் செங்கைவரி வளைக ளாட
வனமுலையிற் குடைந்த முத்து வடங்க ளாட
மழைகவிந்த குழலவிழ்ந்து மருங்கி லாடச்
சூழிவலம் புரிகளிற்றுமைந்த ராடச்
சுரர்முனிவ ருயிரனைத்துஞ் சூறை யாடச்
சுடர்வயிர வடம்பிணைத்துக் கமுகி னொற்றித்
தூங்குமணிப் பொன்னூசல் துவக்கி யாட
மேழிவலம் புரிபழனப் பேரை நாட்டில்
மேதகுசீர் வளம்பாடி யாடி ரூசல்
விரைத்துளபச் செழும்புயலைத் தொழுநூற் றெட்டு
வேதியர்தம் புகழ்பாடி யாடி ரூசல்
ஆழிவலம் புரிபாடி யாடி ரூசல்
அவன்கருடக் கொடிபாடி யாடி ரூசல்
ஆழ்வார்கள் தமிழ்பாடி யாடி ரூசல்
அமுதனையீ ரணியிழையீ ராடி ரூசல்.

அறுசீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

20 ஆடி லான்கழ லாடி லான்சுனை யாடி லான்பனிநீர்
போடி லாள்கலை தேடி லாள்வளை பூனி லாளவடான்
பீடு லாவிய வீதி கோலிய பேரை வாழ்முகிலே
நாடு வாளிசை பாடு வாணம நார ணாவெனவே

21 நாராய ணாயவென வோதாமல் வீண்மொழிகொ
ணாவாலு மேதுபய னவர்புகழே
யாராலு மோதிலவை கேளாத மூடர்செவி
யானாலு மேதுபய னறிவிலிகாள்
காரான சோதியழ காராத காதலொடு
காணார்க ணாலுமொரு பயனுளதோ
வாராழி மீதுதுயில் பேரேசர் கோயில்வலம்
வாராத காலுமொரு பயனிலையே.

## எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

22 ஒருபிழைகண் டயர்ப்பா ருளாதரவி லோதா
ரூறவுநினைந் திருப்பார்கள் கோபமமை யாதோ
விருவருமிங் கிதத்தோடு கூடியணை யாநா
ளிளமைநலங் கிடைத்தாலிங் கேது பயனாமோ
முருகவிழ்செங் கனிக்கோவை வாய்மொழியி னாலே
முனிவர்பெருங் குடித்தாழ்வு வளரதறி யீரோ
மருவியசந் தன்க்காவின் மாமலர் கொய் வாரே
மகரநெடுங் குழைக்காதர் பேரையணை யாரே.

## கட்டளைக் கலித்துறை

23 ஆரய ராம லிருப்பா ரவருக் கருள் புரியும்
பேரைய ராதிபர் நங்குழைக் காதர் பிறங்கன் மின்னே
தாரை யராவிக் கடைந்தசெவ் வேலென்னச்
சாய்ந்த குழற்
காரை யராவியென் னெஞ்சை யராவுங் கடைக்
கண்களே.

## பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

24 கண்ணகம் புதைப்ப வெளியிடஞ் சுவறக்
கருந்தடத் திருட்படாய் விரித்துக்
கடல்வீடக் குழம்பை யள்ளியிட் டுலகங்
கரந்துகொண் டனவெனத் தணிந்து
விண்ணகம் புதைத்த பரிதியு மதியும்
விழுங்கியுண் டொருபுடை செறிப்ப

வேர்விழுந் தூழி முடிவிலாக் கங்குல்
விடிவிலாத் தகைமையே துரையாய்
மண்ணகம் புதைத்த துணையடி முனிவர்
மனத்தகம் புதைப்ப வேழ்புலியும்
வயிற்றகம் புதைத்த பெருமவென் றிடைச்சி
மார்க்கமும் புதைப்பநீ வெருவிப்
பண்ணகம் புதைத்த பவளவாய் புதைத்துப்
பருமணிக் குழைபிடித் தாடப்
படித்தவர் சுருதி முடித்தவர் பேரைப்
பதிவளம் புரக்குமா முகிலே.

### நேரிசை வெண்பா

25 மாவளர்த்த வன்னையரு மாரன் குயில்வளர்க்கக்
காவளர்த்தா ரென்றுகுழைக் காதரே -நாவளைத்துச்
செற்றார் நகைவெடிப்பத் தீவெடிப்பப் பூந்துளவின்
முற்றார் நகைவெடிக்கு மோ.

### சுரம் போக்கு

### கட்டளைக் கலித்துறை

26 வெடித்துச் சிவந்தவப் பாலைக்கப்பாலை வெளியில்
வெப்பம்
பிடித்துச் சிவந்தன வோவந்த ணீர்கண்ணன்
பேரைவெற்பில்
வடித்துச் சிவந்தசெம் பஞ்சோ டனிச்ச மலருறுத்தித்
தடித்துச் சிவந்தன கண்டீர் மடந்தைபொற்
றாளினையே

### மறம்

### சந்தத் தாழிசை

27 தாளெடுத்துல களந்தபேரைமுகி றனதருட்குறு
நிலத்துளோர்
தையலைப்புது மணங்குறித்தெழுது சருகுகொண்டு
வருதூதனே

வேளெடுத்தவடி வேல்படப்பொருது வினையெடுத்
தவர சரையெலாம்
வெட்டிவிட்டதிரு முகமலாதுதிரு முகமும் வேறறிவ
தில்லையே
நாளெடுத்தபடை பாடெடுத்ததிலை நாணயப்பிழையி
வின்னமு
நரபதித்தலைவர் தலையெடுத்ததிலை
நமனெதிர்த்துவரு மாயினும்
வாளெடுத்துவரி சிலைகுனித்துவளை தடிபிடித்து
மெமர் செல்வராம்
மனுவரம்பழியு நாளுமெங்கள்குல மறவரம்பழிவ
தில்லையே

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

இல்லத் தடங்கா மடந்தையர்கற்
பெனவும் பசிக்கென் றிரந்தவர்கொன்
றீயா தவர்கைப் பொருள்போலு
மிரவிக் கிருள்போ லவுமடியார்
சொல்லத் தொலையா வெழுபிறப்புந்
துடைக்குங் கருணைக் குழைக்காதர்
துணைத்தா ளளக்கும் புவிமருங்கிற்
சுற்றிக் கிடக்குங் கருங்கடலே
கொல்லத் துணியா தன்னையருங்
கொதியார் மதியு மதன்படையுங்
கூப்பிட் டழையாக் கருங்குயிலுங்
கொடுமை படுத்தாக் குழலிசையு
மல்லற் படுத்தா வயலவரு
மளித்துப் பிரியீ ரெனவுரையா
தயர்த்துக் கொடுத்த மனமிருக்க
வாரை வெறுக்கக் கடவேமால்.

சம்பிரதம்

29 கடல டங்கவுறு மொருசி றங்கைபுனல்
கடுகி லும்புகுது மூசிவே
ரிடம்வ லஞ்சுழலும் வடத டங்கிரியு

மெமது சம்பிரத மீதெலா
முடனி ருந்துமகிழ் குருப ரன்பரவை
யுலக ளந்தமுகில் பேரைமா
லடல்பு ரிந்துபக லிரவு கொண்டதுவு
மரிய சம்பிரத மானதே.

### நேரிசை வெண்பா

30 தேவகியார் பெற்ற திருவருத்தம் பாராமல்
கோவியர்தா மன்றுகுழைக் காதரே - தாவி
யடிக்குங்கைம் மாறோநீ ரஞ்சினர்போற் காது.
பிடிக்கும்கைம் மாறோ பெரிது.

### கலிவிருத்தம்

31 பெருவிட வரவணைப் பேரை மாதவன்
மருவிட நினைகிலான் மங்கை மாதரே
தருவிட வெண்ணிலாத் தழைத்த தெங்கணு
மொருவிட மிலைநமக் குறைவி டங்களே.

### கட்டளைக் கலித்துறை

32 உறைக்கோடு மாடவர் வாளா லொருகோம் பிறந்து மற்றைக்
குறைக் கோடு கொண்டுழல் குஞ்சரம் போலும் கொடியிடையீர்
துறைக் கோடு வாய்வைத்த மால்பே ரையிற் றென்னர் சூழ்ந்த பண்டைச்
சிறைக்கோடு மேகம் பிறைக்கோடு தாங்கிச் சிறக்கின்றதே.

### தூது

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சிறந்தார் தொழத்தரு மருந்தா மழைப்புயல்
செழும்பே ரையுத் தமர்பால்
அறந்தா னுறக்குரு கினங்காண் மடப்பெடை
யனங்கா ளுரைத் தருள்வீர்

இறந்தா மெனிற்பிறை யிருந்தா மெனிற்பழு
திரங்கா மனத்தவர் போன்
மறந்தான் மறக்கவு நினைந்தா னினைக்கவு
மனந்தா னெமக் கிலையே.

### வெண்பா

34 எமக்குமுகம் வாட விருந்தா மரைகள்
தமக்குமுகம் வாடுஞ் சலிப்பென் - அமைத்துரையும்
பெண்மதியென் றோதாமற் பேதைநாட்
டன்னங்காள்
தன்மதியி லுண்டோ தழல்.

### பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

35 தழல்பிழிந்து சாறுகொண்டு சந்தனத்தி லிட்டதார்
தண்ணிலாவை யெரியெழச் சமைத்துவிட்ட
பாவியார்
குழல் பிழிந்த விசையிலே குளிர்ந்தசிங்கி வைத்ததார்
கொடுமைவந்த காலமாசை கொண்டிருக்க
வல்லமோ
நிழல்பிழிந்து பருகவென்று நினையுமசுர மருதமும்
நெரியவென்ற குரிசில்பேரை நீர்குளிக்கு
நாரைகா
ளழல்பிழிந்த வேலரெம்மை யாணையிட் டகன்றதா
லந்தவாய்மை யுடல்பிழிந்தெ னாவியுண்டு
விட்டதே.

### பின்முடுகு வெண்பா

36 ஆவியுண்டு மையுண் டறிவையுண்டு நிற்குமிரு
காவியுண்டு தாமரைக்கே கண்டீரோ - தேவியுடன்
மால்வளர்ந்த பேரையின்கண் வாவிகண்டு
பூவையுண்டு
கால்கிளர்ந்த நீலவண்டு காள்.

## அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

37 வண்டிருக்குங் குழற்புறத்து வாட்டிமடித் துப்பிடித்து
வடிந்த வள்ளைத்
தண்டிருக்குங் குழைமடவீர் குழைக்காதர்
பேரையின்முத் தமிழே போல
வுண்டிருக்க வுவட்டாத விதழமுது மிளநீரு முங்கள்
பாலிற்
கொண்டிருக்கப் பெருங்காமப் பசிக்குதவா
திருப்பதுவுங் கொடுமை தானே.

## வஞ்சி விருத்தம்

38 கொடித்தேரினர் குழைக்காதினர் குலக்கார்வரை
மேற்
பிடித்தீர்தழை கெடுத்தீர்கரி பிணைத்தேடுவ தேன்
அடித்தாமரை நடப்பீரலை யடைத்தாளுவ தோர்
தொடித்தோழியர் புனச்சார்பொரு தொழுத்தாலை
வே

## கட்டளைக் கலித்துறை

39 தொழும்பாக்கி யண்டர் தொழக்கற்ப காடவி
சூழலர்த்தே
னெழும்பாக் கியமென் றிருப்பீதல் லீரமிந்து
விட்டந்தட்டித்
தழும்பாக் கியபொழில் சூழ்பேரை மால்சர
ணாரவிந்தச்
செழும்பாக் கியமென் றவனடி யார்பண்டு செய்தவமே

## அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

40. செய்யிற் கரும்பு வளர்பேரைத் திருமா றிருநா
டனையீரும்
தொய்யிற் கரும்பு மலர்க்கணையுந் தொழிலுக்
கரும்பு விழியுமதன்
கையிற் கரும்பு மலர்க்கணையுங் கைக்கொண்
டதுபோற் கண்டவென்மேல்
எய்யிற் கரும்புங் கணையுமிலை இன்றைக் கிறவா
திருப்பேனே.

## பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

41 இரும்பை நெறித்துத் துதிக்கையடுத்
திளங்கோ மகளிர் விரனெறிப்ப
வெதிர்த்தார் சிரத்தை நெறித்துமலை
யிடறி நெறித்துக் கடற்புறத்துச்
சுரும்பை நெறித்து வழிகறங்கச்
சுற்றும் தழைக்குஞ் செவிப்படலத்
துங்கக் களிற்றின் மிசைப்பவனி
தொழுதாள் விரகம் தொலையாதோ?
கரும்பை நெறித்து முடப்பலவின்
கனியை நெறித்து மடைமுதுகீற்
கதலிப் படலைக் குலைநெறித்துக்
கன்னிக் கமுகின் மடனெறித்துக்
குரும்பை நெறித்துத் தேனொழுகுங்
குவளை நெறித்துப் புடைத்துவரால்
குதிக்கும் புனற்பே ரையின் மகரக்
குழையே யெவர்க்குங் கோமானே.

## எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

42 மானென்பார் கலையென்பார் தொடுக்க லாகு
மலர்த்தழையா லெய்ததொரு மத்த வேழந்
தானென்பார் பதியென்பார் வழியே தென்பார்
தாமரைப்பூங் கோயிலென்று தவிர்ந்த தென்பார்
கோனென்பார் குலத்துதிக்குங் கருணை மேகங்
குழைக்காதர் பேரையிளங் கொம்பே வம்பே
யானென்பா ரல்லவென்பா ரில்லை யென்பா
ரிவர்கோட்டிக் கெதிருரைப்பார் யாவர் தாமே.

## கழித் தாழிசை

43 தாமோதரர் மதுசூதனர் தருபேரையின் மடவீர்
நாமோதர மாமோகினி நலமோதர மறியீர்
ஆமோதர மலவோவெளி தடியேறுடன் முனிவாய்ப்
போமோதர நினையீர்கமழ் புதுவாய் மல ரமுதே.

### கலிவிருத்தம்

44. தேனார் பொருனைத் திருமால் தமிழ்ப்பேரை
யானாத கல்வி யறிவார் பயனன்றோ
கானார் கருங்குழலார் காமத்தின் பால்மறந்து
போனா ரறத்தின் பொருட்டுப் பொருட்பாலே.

### கலித்தாழிசை

45 பால்வடியுந் திரண்முலையும் பச்சுடம்பும் பசுநரம்புஞ்
சூலவடிவுந் தோன்றாமற் றூண்வயிற்றிற்
றோன்றியநாண்
மேல்வடிவா மிரணியனை வினைதொலைக்குந்
தமிழ்ப்பேரை
மால்வடிவாந் திருவடிவ மரகதத்தின் மணிவடிவே.

### கட்டளைக் கலித்துறை

46 வடித்தூது சங்கொப்ப வெண்டோட்டு மல்லிகை
வாயிற்கௌவிப்
பிடித்தூது வண்டோடும் பேசுகிலேன் பிரியாத
வைவர்
குடித்தூது சென்ற குழைக்காதர்க் கென்மயல்
கூறிவரும்
படித்தூது நீசெல்லு வாய்மழை சாடும் பனிக்
கொண்டலே

### கழித்தாழிசை

47 கொண்டலைக் கோதி வகிரிட் டிருண்ட குழலாரே
குங்குமச் சேறு பூசித் திரண்ட முலையாரே
தெண்டிரைப் பாயல் மீதிற் றுயின்ற ருளுமாமால்
தென்திருப் பேரை மீதிற் சிறந்த மடவீரே
அண்டற்பொற் பூமி தான்விட் டெழுந்த ருளினீரோ
அம்புயக் கோயில் வாழப் பிறந்த வருநாமோ
தண்டமிழ்ப் பாகி னூறிக் கனிந்த மொழிதாரீர்
சந்தனக் காவி னீழற் பொழிந்து மருவீரே.

### கட்டளைக் கலித்துறை

48 மருத்தேற லுண்ணுங் களிவண்டு காள்வம்மின்
மாலறிந்து
கருத்தே மகிழவுங் கண்களி கூரவுங் காய்கதலிக்
குருத்தே விசும்பளக் கும்பேரை மால்குழைக்
காதர்செம்பொற்
றிருத்தே ரிலுங்கடி தாய்வரு மோவன்பர் தேர்வரவே

### எழுசீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

49 வரம்பறுங் கடற்பாயல் பிரிந்தகங் குழைக்காதர்
மகிழ்ந்ததென் திருப்பேரை வளவயல்சூழ்
கரும்பையுங் கசப்பாக விளைந்தமென் சுவைப்பாகு
கனிந்தசெந் தமிழ்ப்போலு மொழிமடவீர்.
இரும்புநெஞ் சவர்க்காக நெகிழ்ந்தநெஞ் செமக்காக
விருந்துசஞ் சரித்தாவி யவர்பிறகே
விரும்புநெஞ் செமக்காக மறந்தவன் பவர்க்காக
விரிஞ்சலும் படைத்தானென் விதிவசமே

### பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

50 விதிக்குந் தொழிலாற் பலகோலம்
வெவ்வே றெடுத்து நடித்தொருவன்
விளையா டுவபோற் றொலையாத
வினையிற் சுழன்று தடுமாறி
எதிற்குஞ் சிறிதா மெறும்புகடை
யானை முதலாந் தொல்குலத்தி
லெல்லாப் பிறப்பும் பிறந்தலுத்தே
னினியுன் திருத்தா ளெனக்கருள்வாய்
குதிக்குங் கலுழிப் பெருஞ்சுவட்டுக்
குறுங்கட் பெருவான் மழைமதித்துக்
கொலைவேட் டெழுதெவ் வுடல்பிளக்கக்
குத்தும் பிறைக்கிம் புரியெயிற்று
மதிக்கும் புகர்மத் தகமுகத்து
வரிவண் டிரைக்கும் பணைக்கரத்து
மதவா ரணத்துக் கருள்புரியும்
மகரக் குழையெம் பெருமானே.

## எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

51 மகரக்குழை மாயன் பொருனைத்துறை நாடன்
மண்டங்குடி யாளுந் தொண்டன்பணி வாதன்
பகதற்கரி தாகும் பரதத்துவ போதன்
பைம்பொற்கிரி வாழுஞ் செம்பொற்கொடி
போல்வாய்
சிகரத்தன பாரங் குழையக்குறு வேர்வுஞ்
சிந்துங்கனி வாயின் பந்தத்துரை மாறுந்
தகரக்குழல் சோருங் களவீத்தொழில் போகந்
தங்குஞ்சுனை தானிங் கெங்குங்கிடை யாதே.

## சந்தக்கலி விருத்தம்

52 எங்குங்கிடை யாதபே ரின்பந்தரு பேரைமால்
வெங்கண்களி யானைபோம் வேள்கண்டெழு
மாதரார்
சங்கங்களை வாருகே சந்தத்துழல் வருமா
தங்கங்கணி யாகவே எம்பின்னுயிர் வாடுமே.

## அறுசீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

53 வாடு மனைத்துயிர் வாழ வளிப்பவர் மாமக
ரக்குழைமால்
கூடு புனற்றுறை யாடி யிளைத்துடல் கூறு
நரைக்குருகீர்
பேடையை விட்டக லாதிரு முத்தமிழ் பேரறி
விற்குணமே
யாடவ ரிப்படி போன பிழைக்கினி யாரை
வெறுப்பதுவே.

## பதினான்கு சீர்ச் சந்த விருத்தம்

54. ஆர்வெறுப்பினு மயல் வெறுப்பினு மன்னைமார்கள்
வெறுப்பினு
மமுதசந்திர கலைவெறுப்பினு மந்திமாலை
வெதுப்ப வேள்
போர்வெறுப்பினு மறலிவந்தொரு புடைவெறுப்
பினும் வளைகடற்

புடவியேழும் வெறுப்பினுமொரு பொருளதாக
நினைப்பனோ
வார்வெறுத்தெழு கொங்கையீர்மக ரக்குழைத்திரு
மாயனார்
மார்பிடத்தும் வரைப்புயத்தும் மணந்தணைந்து
முயங்குபைந்
தார்வெறித்துள வாயினுஞ் சருகாயினும்
பெற விட்டதோர்
சாமகீத மொழிச்சுரும்பொடு தான்வெறுப்பில
தாகியே.

## அறுசீக் கழிநெடிலடி வண்ண விருத்தம்

55 இலதாகி யுளதாகி யுடலாகி யுயிராகி யிருளாகி
யொளியாகநீ
பலதாரை வெகுமாயை விளையாடு குணநீதி
பலதேவ ரறிவார்களோ
மலருடு கயல்சாட மதகூரு புனல்சாடி வருபேரை
நகராளனே
சிலபேர்க ளறிவார்கள் சதுவேத முதுபோத
தெளிஞான முடையோர்களே.

## புய வகுப்பு

### முப்பத்திரண்டு சீர்க் கழிநெடிலடியாசிரியச் சந்த விருத்தம்

56 உடையக் கலசத் தயிர் கொட் டியெடுத்
திதழ்வழி யொழுகிய திவலை பொழிந்தன
உரலைக் கதவுக் கடையிட் டுயரத்
துறிபல தடவிய நறுநெய் கவர்ந்தன
உடல்கட் டிறுகத் தொழில் மற் பிடியிட்
டசுரரை யெமபுர மளவு துரந்தன
உயிரைப் பருகக் களவிட் டலகைப்
பணைவரை முலைமுக நெருடி யிருந்தன.
படியிற் றுடைபட் டுழலக் கனகனை
நகநுனி யுழுதிடு செருவி யிடந்தன
பனையிற் கனியொத் திருபது முடியத்
தலையுருள் படவடு பகழி சொரிந்தன

பரிதிக் கதிருட் புதையத் தமனப்
 படநிழல் கெழுமிய திகிரி சுமந்தன
பருமச் சிகரக் கயிலைப் பரனுக்
 கிடுபலி கெட நிறை பரிசில் வழங்கின
கடலைக் கடையப் பருமத் துவலித்
 திமையவர் பசியற வமுதம் விளம்பின
களபத் தெளியிற் றுளபத் தொடையில்
 பரிமள ம்ருகபத முழுகி யளைந்தன
கனவட் டமுலைத் திரள்பட் டுருவிப்
 பொதுவியர் வரிவளை பொருது சிவந்தன
கமலத் தவளைத் தழுவிக் களவியி
 லிளகிய புளகம தொழுகி மலிந்தன
மடையிற் கழியிற் பொருநைத் திரையினி
 லுதறிய வரிமண லலகு நெடும்புழை
மதகிற் கதலிப் படலைக் குலையினில்
 வளகமு கடவியில் மருவி வலம்புரி
வயலெக் கரிடப் புதுமுத் தமிழ்சொற்
 குருகைய ரதிபதி பரவு நெடுந்தகை
மகரக் குழையுத் தமனித் தியனுயர்
 பரகதி முதலவ னணிபொற் புயங்களே.

குறம்

பதினான்கு சீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

57 புயங்க சேகர முயங்கு நாடதி
 புகழ்ந்த பேரையை வணங்கியே
புரிந்த வாய்மையி னிகழ்ந்த மாகுறி
 புகன்று வாழ்குற மடந்தைநான்
இயங்கு மாகெவு ளியும்பொ லாதல
 விருந்த மாநில மிணங்கவே
யிசைந்து மாநிதி துலங்க வேயருள்
 பொருந்தி வாழுவை யிலங்கிழாய்
வயங்கு மாதலை வரைந்து பேரதில்
 வளங்கொள் சேவக ரிரண்டுபேர்
வளர்ந்த தாவல ரிரண்டு பேரொரு
 வனுந்த ராதலம் வணங்குவோ

னுயங்கி நானுடல் வருந்தி னேனெழு
குழந்தை வாய்பசி யடங்கவே
யுடந்தை யாயொரு சிறங்கை கூழிடு
கிழிந்த தூசுரு ளுறங்கவே.

## கொற்றியார்

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

58 அரங்கத்து ளேதுயிலு மருஞ்சக்ர பாணிவய
லகஞ்சுற்று பேரை நகர்வாய்
விரும்புற்ற தாமமுலை யரும்பித் தாமரையில்
விளைந்துக்க மாமணி கொலோ
கருங்கற்றை வார்குழலை முடிந்திட்ட நாமமொடு
கலந்திட்ட தாவடமு மாய்
வருங்கொற்றி யாரழகி னரங்கொற்றி யாடலது
மருங்கொற்றி யாரறி வரே

### சந்தக்கலி விருத்தம்

59 வருகார்முகில திருபேரையி லமர்பூ வணைசேர்
பெருவாழ்வொடு மொருநாளவை பிரிவோ பலவே
திருவேயமு துருவேபொரு சிலைவேள் குருவா
முருவேறெம துடல் வேறெம துயிரோ குயிசரே.

### நேரிசை வெண்பா

60 உயிர்முடிக்குஞ் செவ்வந்தி யுண்டெனவே கோதை
மயிர்முடிக்குஞ் செவ்வந்தி வையாள் - அயனார்
பெருத்துளதிக் கேகமும் பேரைமால் சாத்து.
மருத்துளதிக் கேமயலா வாள்.

### எழுசீர்க் கழிநெடிலடி சந்த விருத்தம்

61. மயலற் றவர்க்கருள்செய் மகரக் குழைக் கடவுள்
வயிரப் பொருப்பி னயல்சூழ்
முயலைத் துடைத்துமதி யதனைப் பதித்ததென
முகவட்ட மிட்டு வருவீர்
புயலிற் கறுத்தகுழல் வரையிற் பணைத்தமுலை

புளகிக்கி விற்று வீடும்வே
ரயலற்ற வற்பவிடை திருநெற்றி யிற்றலதே
மழியத் துடைப்ப தழகே.

### அறுசீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

62 அழகு தங்கிய மகர வண்குழை யமலர் தண்கிரிவாய்
நுழை நுழைந்தென துயிரை யுண்டது நுவல
வும்படுமோ
மழை சுமந்தலை கடல் சுமந்திணை மலை
சுமந்தருளே
தழைய வந்தொரு பொழிலி னின்றது தனியிளங்
கொடியே.

### ஒன்பது சீர்க் கழிநெடிலடிச் சந்த விருத்தம்

63. இளங்கொடி யிணங்குமுது சூழல்
நெருங்கிய பொதும்பர்வெளி நீழல்
இதண்புடை யிருந்து விளையாடி நீர்
விளம்பிய குளிர்ந்த மொழி யூடு
கரைந்தது கருங்கலினை வீசி
வெறுங்கவ ணெறிந்துபய னாகுமோ
வளந்தலை மயங்குதமிழ் நாடர்
செகந்தனில் முகுந்தர்வரு பேரை
மடந்தையர் வணங்கு மபிஷேகமே
தெளிந்தசொ லினங்களென நூறு
பசுங்கிளி விழுந்தபுன மீது
செழுந்தினை விளைந்துகரை யேறுமே.

### களி

### பதினான்குசீர்க் கழிநெடிலடிச் சந்தத் தாழிசை

64 கரைபடைத் தமடைமுது குடைப்ப வொரு
கயல் படைத் துலவு பேரை மால்
கருணையைப் புகழ வரு பரப்பிரமர்
களியர்கா னறியு நறவுமாய்

வரிசையிட்டன ளிலச்சி யாகினி
வலைச்சியைத் தொழு மடத்துளே
மதுக்குடந்தனை யெடுத்துவைத் ததனை
வளைய வைத்து நட மாடுவோம்
விரிசடைக் கடவுள் புரமெரித் ததுவும்
விடமிடற் றிடை செறித்ததும்
வேலுடைக் கடவுள் சூரனைச் சமரில்
வென்றதும் பொருது கொன்றதும்
அரிமலர்ப் பிரமனறுதலைக் குடுமி
யறுதலைக் குறை முளைத்ததும்
அன்று பஞ்சமிதன் மந்திரப் பெருமை
யன்றி வேறு வரமல்லவே.

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

65 அல்லிக் கமல மடிபெயர வருகிற் குவளைக் கழுத்தொடிய
வாம்பற் குழுவின் மடலுடைய வலையிற் றுளைத்து கரையேறி
நெல்லிற் புகுந்து கொடிவள்ளை நெரியத் தவழ்ந்து பணிலமணி
நிலவைப் பொழியுந் தமிழ்ப் பேரை நெடுமால் பொருனைத் திருநாட்டின்
வல்லிக் கொடியே மடப்பிடியே வனசத் திருவே யமுதுருவே
வயிரக் கொழுந்தே மரகதமே மயிலே யனையீர் மழையருவி
கல்லிற் பொருத கரைச் சாரல் கடிகாவனைத்துந் தொலைத்தனனென்
கையுந் தழையுமுகம் பார்த்துக் கருணை புரியக் கடவீரே.

வஞ்சித் துறை

66 வீர மாரனா
லார மாலை வேம்
நேர மாலை தா
நேர மாலைதா
பேரை மாயனே.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியத் தாழிசை

67 பேரை வளம்பதி மாலே பேதையை வந்தணை யாநா
ளீர நறுங்குழ லாரே பேதை நினைந்தினி நோவேன்
மார சரம்படு பூவோ வாரி விடும்பனி நீரோ
ஆர வடம்படு தூளோ வாவியை யுண்டது தானே.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்
### கார் காலம்

68 தான் குதிக்கு மந்தியுமீ றந்தி மாலைத்
தழல் குதிக்கு மெனத் துணையே தழுவுங்காலம்
தேன் குதிக்கு மிதழியும் பொன் சிதறுங் காலம்
திருந்திழையார் விழித்தாளஞ் சிந்துங் காலம்
நான்குதிக்கு மொழுங் குதிக்கும் படியே வந்த
ஞானவரோ தயன்பேரை நகர்வாய் வட்ட
வான் குதிக்குங் கடலைமடை திறந்தா வொப்ப
மழை குதிக்குங் காலமவர் மறந்த காலம்.

### தரவு கொச்சகக் கலிப்பா

69 மறம் புரியுந் திகிரியுடன் வலம்புரியுந்தரித்து நமக்
கறம் புரியுங் குழைக்காத ரருட்பேரை யுயர் நகர்
வாய்ப்
புறம் புரியு மணிப் புரிசைப் பொறி சுமக்குந் துகிற்
கொடிக
ணிறம் புரியும் புயல் குளித்து நீணிலவுந்
துவக்குமே.

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

70 நீணி லாவெழும் பளிக்குமண் டபத்திடை
நின்றுதன் னிழற் கோலங்
காணி லாயிழை யொருத்தியென் றழைக்குமென்
கன்னியைத் தழுவாயோ
தூணி லாடக னுரம் பிளந் துயிருணத்
தோன்றிய நெடுமாலே
கேணுலாவிய தடம் பொழிற் பேரைவாழ்
திருந் தெழிற் குரியானே.

### அறுசீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

71 உரிசை மாவுள வொழுகு தேனுள வுறைகொள்
கூவலின் வாய்
விரியு நீருள பதியி னீரினி விடிய வேகுகவே
யரிவை வாடின ளிறைவ பேரையி லமர
மால்வரைவா
யிரவி போனடி னொருவர் போகில ரெயினரோ
கொடிதே.

### கட்டளைக் கலிப்பா

72 கொடியளந்த வசோதைகை மாறஞ்சிக்
குழை தொடுங் கைக்குழைக்காத ரேயும
தடியளந்த வுயிர் யாவும் வாழவன்
றாழிகொண்ட மரக்கால் பதித்துநீர்
படியளந்தது போதாம லன்னமும்
படைத்திருப்பது பாலனென்றோதலால்
மிடியளந்த வறிஞரைப் போலன்று
வெண்ணெய் தொட்டுண்ட தென்ன வீநோதமே

### பன்னிரு கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

73 என்னைத் தனியே புதுநிலவுக் கிரையிட்டிருக்கக்
கடவீரோ
எரிவாய் மடுக்கும் பனிவாடை யிளமைப் பயனு
மடநாணுந்
தின்னக் கொடுத்து விடுவீரோ தீரா விடும்பை யிவை
யனைத்துந்
தீர்க்கும்படியே செழுந்துளபத் திருத்தார்
கொடுத்து விடுவீரோ
கன்னற் கனிவாய்ப் பாலொழுகக் கதலிக் குலைவா
யமுதொழுகக்
கருங்காவியின் வாய்த் தேனொழுகக்
கமலத்தவர் வாய்த் தாதொழுகச்
செந்நெற் குலைவாய்ப் பாலொழுகச் செழுந்தாண்
மேதி புகுந்து முக்குந்
திரைநீர் பெருகு வயற்பேரைச் செல்வக்
கருணைப் பெருமாளே.

## கட்டளைக் கலித்துறை

74 மாவாய்க் கிழிக்குங் குழைக்காதர் பேரை வளை
கடனீர்
நாவாய் படைத்துப் பயனென் கொலோ நடுச்
சொல்லறியாப்
பூவாய் குடைந்து செழுந்தா தளைந்து பொதிந்த
தென்றற்
றீவாய் மறலி யெனவந் துலாவுமித் தென்றிசைக்கே

## எண்சீர்க் கழிநெடிலடி சந்தத் தாழிசை

75 தெற்குத் திசை நோக்கித்திரு வரங்கத்திடைத்
துயில்மால்
தென்பேரையி லன்பாகிய செம்பொற்கிரி மடவீர்
அற்பத்தழை கண்டான்முலை யாளுக்கி
டொணாதோ
அருமைப் பணி விடைபோதவு மடியேனுள
நலனோ
கற்பித்தன செய்வேன்கடி காவிற்றழை கொய்வேன்
காமன்கையில் வீலையோவிரு காதோலை
யிலெழுதா
விற்கத்திரு வுளமோவெனை மேவத்திரு வுளமோ
வினையேனொரு பிழைநூறிது விண்ணப்ப
முமக்கே.

## அறுசீர்க் கழிநெடிலடி விருத்தம்

76 கேச வாமழை வள்ளலே கேழ லாயதிர் கொண்டலே
யீச னேதிகழ் பேரைவா யிறைவனேயென
வெண்ணியே
தாச வாழ்வை முனிந்துநீர் நாரணா நம]
வென்றுவாய்
பேசு வீரறி கின்றதே பிறவீ வேரரிகின்றதே.

### சித்து

### ஐம்பத்து நான்கு சீர்க் கழிநெடிலடி வண்ண விருத்தம்

77 அரிபாளை நறவூறு முதுதாழை கொண்டல்
முடிசூடி வெளிகீறு சுடர்கால் குடைந்து
புனல்வேலி வலிஞாழல் கனிசூ ரலம்பு
முழுமுடு படமோதி வரைவா யிறங்கி
யழல்சீறி நிழல்மாறி மலைவேக வெம்பு
சுரமாறி நிரையாயர் நிலமே கடந்து
தத்திவீழ் பொருநை வந்தநாள்

அலையேறு புதுநீரி லெதிரேறி நின்று
வலைவாணர் புனல்சாய மணிவா லறைந்து
கழைபாற விடுதோணி தடுமாற வுந்தி
வளர்யானை கொடுபோன சுழியூடலம்பி
யகிலார மணநாறு வெகுசே றளைந்து
முடிகூடு நரைபோலு நுரைமாலை சிந்த
முத்த வால்வளை கறங்கவே

மருவீதி மலராடை புனைமார் பணிந்து
துறைதோறு மருகோடி விளையாடி யங்க
ணலையாத கயமூழ்கி யணைகோடு கண்டு
மதகோடு மடைதாழ வினைமேலெழுந்து
வயலாமை கொழுமேழி முகவாய் முறிந்து
கடுமேதி தடுமாற வுளவான் மலங்க
வெக்கர் பாய்மணல் மருங்குறா

மடவாழை குலைசாய நிலைசூழ் கரும்பு
புடை போல வளர்பூக முடல்கூன மந்தி
தளை மீறி யுமிழ்தேனின் மறுகா றதும்ப
மடநாரை பெடையோடு மலர்மே லொதுங்க
வரிவாளை குதிபாயும் வளநா டுகந்த
நெடுமாய னருள்பேரை நகர் வாழ் வுகந்த
சித்தரேமடி பணிந்து கேள்

திருமாது பிரியாத மடமாது செம் பொன்
றுருவான தொருவேரி லதுமா லறிந்த

வொருமூலி தடவாமு னரனார் பகம்பொன்
னிறமான பிரமாண மறைநூலி லுண்டு
சிலையான வடமேரு வரனா ருகந்த
துரையாணி யொருகோடி யிழையாத
செம்பொன்
வைத்த தார்பெருமை யும்பரூர்

சிறுகாலை நிறமான கனகாதி யெங்கள்
குருநாதர் பரிவான மதிபார முண்டு
மதராஜ னுபதேச மொருபூ மருந்து
மடமாத குறவோடு விளைபா டகங்கள்
திரைதாவு கடலூடு படுதீவி லொன்று
பெயரீழ நவகோடி மணிசாடு கின்ற
வித்தையோ புதுமை யின்று நீ

சருவாம லொருபூத ரணுகாம லஞ்சு
தலைவாச லடைதாழி டருகே யிருந்து
குகைமூடு யுமிபோடு கரிபோடு செம்பி
லரிதார மிடுதார முதலா மிரும்பு
தனிலூத விடிவேறு தவறாது செம்பொ
னதுவார முடனோது முபதேச மந்த்ரம்
அப்பனே அமுது கொண்டுவா.

தலைவாழை யிலைமீது படைகோழி கொன்று
பொரிகாடை கதுவாலி மிளகான நன்று
சருகாமை கொடுவாவென் றுயிர்கா னுடும்பு
கயல்தேளி சிறுசாளை பொடிபாதி நண்டு
தயிர்மாறி பருமாறு திரன்பால் சொரிந்து
பணியார வகைபோடு நளபாக முண்ட
தப்படா களப சந்தமே.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

78 சந்தனக் காவில் வந்துநிற் பீர்த டங்குளித் தாச
லாடுவீர்
பந்தடித் தாலும் மருங்குபற் றாது பண்பலக காணு
மாதரே

தெந்திருப் பேரை வண்குழைக் காதர் திண்கிரிச்
சாரல் மீதிலே
மைந்தரைச் சீறி யுங்கள் நீட்டுர வஞ்சகக் காவி
தாவுமே.

### மடக்கு - கட்டளைக் கலிப்பா

79 தாவி யுண்ப துறிமுகப் பாலையே
சயன போகத் தலமுகப் பாலையே
தேவி யென்பது பங்கயத் தாளையே
தேவர் கோன்விரும் பங்கையத்தாளையே
யாவு மாய்வந் துதிப்பது மாயனே
யென்று பன்னித் துதிப்பது மாயனே.
நாவி லோதுவ துன்றிருப் பேரையே
நான் வணங்குவ துன்றிருப் பேரையே.

### வஞ்சி விருத்தம்

80 பேரி யம்பிலன் பேரைமால்
வேரி யம்புனல் வெற்பில் வேள்
காரி யம்பறை கண்கள் வேல்
வாரி யம்பெனன் மாறுமே.

### பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

81 மானுடன் பிறந்து கலையுடன் வளர்ந்து
மதியுடம் பழுக்கறத் துடைத்து
வள்ளையுங் குமிழுங் குமுதமும் பதித்து
மாசறக் கடைந்தவேல் கிடத்திக்
கூனுடன் கிடந்த தடஞ்சிலை தொடுத்துக்
கொடுங் கொலைத் திலதமிட் டெழுதிக்
குருகுலப் பிரமன் பெருமையிற் படைத்த
குளிர்முகத் திருவை நீ தருவாய்
கானகம் புகுந்து விராதனை வதைத்துக்
கவந்தனைக் கவர்ந்து சூர்ப்பனகை
கரியமூக் கரிந்து கானுயிர்க் குடித்துக்
கருங்கடல் வழிபடக் கடந்து

போனது மரக்கன் புகுந்தது முடிவிற்
புரந்தரன் பெருந்தவ மெனமுன்
பொருதவா மகரக் குழையனே கருணைப்
புனல்வளம் பொழிந்தகார் முகிலே.

### அம்மானை - கலித்தாழிசை

82 காரையூர் வண்ணர் குழைக் காதர்சிலைப் போர் விசயன்
தேரையூர் மாலாய்த் திரிந்தனர்கா ணம்மானை
தேரையூர் மாலாய்த் திரிந்தனரே யாமாகிற்
பேரையூ ரென்றிவர்தாம் பேசுவதே னம்மானை
பின்னைமால் கொண்டிருந்தாற் பேசாரோ வம்மானை.

### கைக்கிளை மருட்பா

83 அம்மா னகையு மடுகின்ற மால்பேரை
யெம்மாவி கொண்ட திவணகையே - பெம்மான்
வரிசிலை வடவரை வளைத்த பின்றைத்
திரிபுரஞ் செற்றதுந் திருமுன் னகையே.

### நேரிசை வெண்பா

84 நகைத்தா மரைபுரைதாள் நாயகனார் பேரை
யகத்தா மரையமுதே மன்னாள் – முதத்தழகு
தான்பிடித்த செல்வம் தாய்பிடிக்க மாட்டாமல்
வான்பிடித்த தன்றோ மதி

### ஒன்பதின்சீர் வண்ண விருத்தம்

85 மதிக்கும்பெரு மாள்மதி வார்சடை
முடிக்கும்பெரு மாளய னாரிரு
வருக்கும்பெரு மானெனு மாமறைநூல்
துதிக்கும்பெரு மானெளி யோர்பிழை
பொறுக்கும்பெரு மாளடி யார்வினை
தொலைக்கும்பெரு மாள்வரு பேரையிலே
குதிக்குங்கயல் போல்விழி யீரினி
யிறக்குங்குழை யார்முனம் வார்மனங்
கொதிக்கும்பத மானது தானறியீர்

அதிக்கும்பசி யென்னது தூதையில்
வடிக்குஞ்சிறு சோறிடு மாறிடும்
அறத்தின்பய னாவது தானிதுவே

## அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

86. வேயிருந் திசைத்த செவ்வாய் வீண்ணொடு பிறந்த மேகம்
பேயிருந் தலறக் கொங்கை பிசைந்துண்ட பேரை மாயர்
தூயபைந் துளப நாறுந் துணையடிக் கமலப் பூவே
மாயவெம் பிறவி நோய்க்கு வாகட மருந்து தானே.

## மதங்கியார் - எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

87 மருதொடித்து நெடியசாடு மடிபடத் தவழ்ந்த மால்
வழுதிநாடு பாடியாடி வந்தமா மதங்கியார்
முருகெழக் கிடந்தலைந்து முகிலுலாவு மளகமும்
முனிவருக்கு மயலளித்த முகிழ்நகை ப்ரதாபமும்
இ நகவட்டு முலைமுகத்தி லெழுதிவிட்ட தொய்யிலும்
இளைஞரைத் தொடர்ந்துகொல்லு மின்பவே லிரண்டுமற்
றொருபிறைக் கொழுந்திலன்னை ஒதியிட்ட திலகமும்
உயிர்பறிக்கு மியமனுக்கு பாயவித்தை காணுமே

## மேற்படி விருத்தம்

88 மேலிருக்கு மதிக்குழவி முடித்தார் போற்ற
வீற்றிருக்கும் குழைக்காதர் விமலர் நாட்டிற்
சேலிருக்கும் விழியணங்கே நின்னை யல்லாற்
றெய்வ மாமகளிரையும் தீண்டு வேனோ
மாலிருக்கு மின்பதுன்ப மறிந்தா ரந்தோ
மணிவயிரங் குன்றவெள்ளி வள்ளத் துள்ளே
பாலிருக்க முகஞ்சுளிப்பப் பருவாய் கைப்பப்
படுகொலைசூழ் நஞ்சையள்ளிப் பருகு வாரே.

## கட்டளைக் கலித்துறை

89 பருந்தாட் கொடியதென் றோகுழைக் காதர் பதிப்புரிசைப்
பெருந்தாட் கொடியை யணைங்கே தண்சாரற் பிடியணங்கு
மிருந்தாட் கொடிய கடாயானை போலு மிறைவர் தம்மைக்
கருந்தாட் கொடியிற் றுவக்குநும் மூரிக் கழைக்குறவே

## சுரம் போக்கு

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

90 கழைக்காவ லானதழல் கொதித்தேறு பாலைவழி
கழித்தோமிராமல் மயிலே
தழைக்காவ லார்கமல மலர்த்தாளு றாயலொரு
சரத்தூர மேகி லுளவே
குழைக்காதர் நாடுமவர் திருப்பேரை யூருமணி
கொழித்தேரு வாவி களுநீள்
மழைக்கா ருலாவும் வரி மணற்சூழல் வாவுமிள
மரச் சோலை நீழல் களுமே.

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

91 மேதி பாசடைக் குவளை தின்றுவாய்
வேரி பாய்புனற் பேரை மாயனே
தீது போகவும் பிறவி போகவுந்
தேவ ரேதொழுஞ் செல்வ மானதாள்
ஓதி மாதராற் கயிற்றி லிட்டதால்
உரல்பி ணிக்கவுஞ் சகடு தைக்கவும்
தூது போகவுங் கடவ தோவெனாத்
தொழுது மாமறைச் சுருதி பாடுமே

### நேரிசை வெண்பா

92 பாடு குரலறியாப் பைங்கிளியே செந்தினையின்
காடு பூங்காலறியாக் காவலார் – நீடசுரர்
வேரரிந்த மால்பேரை வெற்பிற் சிலகுறவ
ராரரிந்த வாரறியா ரோ.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

93 அறிவிருந்த சிறுமதலைக் கிரணியனா ரடர்த்தநாள்
வெடித்த தூணிற்
பிறிவிருந்த தேவகிபாற் கருவிருந்த திருவயிறும்
பிரிந்த வன்றே
செறிதரங்க நிறைபொருநைத் திருப்பேரை
வளநகருஞ் சேடன் மீதி
லெறிதரங்கப் பாற்கடலு மென்னெஞ்சு மவர்க்கலா
திடம தாமே.

### எண்சீர்க் கழிநெடிலடிச் சந்த விருத்தம்

94 ககனர்முக் கணர்காண மதலையைச் சலியாது
தலையறுத் துடல்வேறு கறிசமைத் தவள்
பாவியோ
விகடமிட் டொருதேவி தசரதற் கினிதான
மகன்வனத் திடையேக விளைய வைத் தவள்
பாவியோ
மகனெனக் கருதாம னிலவிலிட் டிளவாடை
வளையவிட் டநியாய மதனைவிட் டவள்
பாவியோ
பகநமுத் தமிழ்ஞான கருணைபெற் றவர்பேரை
மடநடைப் பெடைநாரை பதிலினிச் சொல
வேணுமே.

### பாண் - மேற்படி விருத்தம்

95 மேருவைப் பிளந்தெடுத்து வேறுகூறு செய்தபோல்
வெஞ்சினத்தி லிரண்யன்றன் மேனியைப்
பிளந்து பேர்
கூருகிர்தி தடக்கை கொண்டு கூறு செய்த
பேரைமால்
குரைகழற் புகழ்ந்துபாடல் கொண்டு பெற்ற
வரிசையோ
மூரியற்ற விறலியர்க்கு முன்னடைந்து செல்கையால்
மொய்வினைத் துதிக்கை கொண்டு மூடிகளைச்
சரிக்கையால்

பாரியற்கை கொண்டழிந்து பலகடம் பெருக்கையால்
பரிசில் பெற்ற யானைநீதி பாணருக்கு
மொக்குமே.

### பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

96 பாண்வாய் மிழற்றுஞ் சுரும்பின் தொடரவிரி
பங்கயத் தாதிறைத்தும்
பனிமலர்க் குவளையஞ் சேயிதழ் சுரக்கும்
பசுந்துளித் தேனை மாந்திச்
கேண்வாய் தொடுத்தமதி வண்டுளியி னிற்சிதறு
மல்லிகை யவிழ்த்தும் வாகச்
செம்பொற்றகட்டுக் கருந்தாழை மடலிற்
செறித்த பொற் சுண்ணமாடித்
தூண்வாய் சுமக்கும் பளிக்கறைப் பத்திச்
சுவர்ப்புறத் திடைகு யிற்றுஞ்
சுடர்மணிச் சாளரக் கண்வழி நுழைந்துபைந்
துளவைப் பெறாத மடவார்
நாண்வாய் கிழித்துவேள் சிறுநா ணிறுக்கிட
நடக்குஞ் செழுந்தென் றல்பார்
ஞானபுங் கவவிறைவ பேரையம் பதிமுதல்வ
நந்தா வளக் கொண்டலே.

### நேரிசை வெண்பா

97 நந்தா வளம்பிறந்த நம் பேரை மால்பவனி
வந்தார் வளம்பிறந்த வார்த்தைக்கே - செந்தழல்
போல்
வண்ணமா யங்குதித்த மாமதிகண் டென்பசலைக்
கென்னமா யங்குதித்த தே.

### எழுசீர்ச் சந்த விருத்தம்

98 குதிக்குங்கவுள் மதத்தண்டுளி மழைக்குஞ்சர
மழைக்கும் புயல்
கொழிக்குந்தமிழ் வளர்பே ரையிலே
மதிக்கும்பொருள் மிகப் பெண்டுகள் வெறுக்குங்குடி
தழைக்கும்படி

வளர்க்குந்திரு மடமா மயிலே
வறிக்கும்படி படிக்குஞ்சிறி தனிச்சங்களும் பணிப்
பஞ்சிலும்
வெறுக்கும்பத முனதா கையினால்
உதிக்குங்கதிர் வெறுக்கும்பால் கொதிக்குஞ்சுடர்
நடக்குந்தொறு
முறைக்கும்பொழு துயிர்வா டுவையே.

### இருபத்தைந்தடி நேரிசை யாசிரியப்பா

99 வாடைவந் தியங்கப் பீடைகொண் டுளதே
தென்றலங் கன்று மென்றுதின் றுமிழ்ந்து
கோதுபட வாருயிர்க் குறையையுஞ் சுழித்துக்
குழித்துவிரல் குழைத்துச் சுழித்தமணற் கூடலும்
அள்ளி யிட்ட புள்ளியம் பசலையும்
துயிற்சுவை யறியாப் பயிர்ப்புறு தடங்களும்
மறவா வன்புந் துறவா வுள்ளமும்
அன்னப் பேடும் புன்னையங் காவும்
துணைபட விரிந்து துயர்படுங் காலத்தும்
பழுதிலா துயர்ந்த வழுதிநாட் டெவையும்
யாரையுந் தமிழ்ப் பேரையும் புரக்க
வளநகர் வார்குழைச் சிகரபூ தரத்தோன்
தெய்வ நாயக னைவர்தேர்ப் பாகன்
மலைமால் வரைத்தலை மலைச்சா ரலின்கண்
மணங்கொள் பூங்கொடி யணங்குதண் பொதும்பரிற்
சிறந்த காட்சியிற் பிறந்ததண் ணளிபோற்
கைதொட்டுத் தலைவர் மெய்தொட்டுப் பயின்று
பணைமுலைக் குரும்பை பிணைமலைப் புயத்தின்
ஊடுறப் பொருது பாடுறக் கிடப்ப
வரிவளைத் தழும்பு மார்பிடத் தழுந்தப்
பரிபுரச் சில்லொலி பல்கல னொலிப்பப்
புலவியுங் கலவியும் பொருந்திநற் சீருள்
நலமிகு பெருஞ்சுவை நமக்கினி தளிக்கச்
சிறுதுயிற் கனவுதந் தருளு
மகர நெடுங்குழை வாழிவா ழியவே.

## நேரிசை வெண்பா

100 வாழிபுகழ்ப் பேரை மகரக் குழைவாழி
வாழிதமிழ் நூற்றெட்டு மாமறையோர் - வாழியவே
தேக்கும் பதகமலந் தீர்த்தெனது சிந்தையுள்ளே
பூக்கும் பதகமலப் பூ.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

101. பதித்தநவ ரத்னமணி மோலி வாழி
பங்கயப்பூந் திருமுகச்செம் பவளம் வாழி
கதித்தசீர் நெற்றியில்வெண் டிருமண் காப்பு
கத்தூரித் திலகமிரு கண்கள் வாழி
துதித்தநறும் பசுந்துபைத் தோள்கள் வாழி
சுரிமுகச்சங் காழிவான் கதைவில் வாழி
மதித்தபீ தாம்பரஞ்சேர் அரைநூல் வாழி
மகரநெடுங் குழைக்காதர் வாழி வாழி.

முற்றும்



# குழைக்காதர் கலம்பகம்

காப்பு - எடுத்துக் கொண்ட நூல் இனிது முடியும் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகிறார். காக்க - காவலாக இருக்கட்டும். வியங்கோள் வினை முற்று. பராங்குசக் களிறு காக்க ! பவம் - பிறப்பு. விலங்கறுத்த - பற்று நீக்கின, புள்ளின் பாகன் - கருடனை ஊர்ந்து செல்வோன். தொடர்ந்து பற்றி - பற்றித் தொடர்ந்து; கவி பொழியும் - கவிதையை மிகுதியாகச் செய்யும். பராங் குசன் - நம்மாழ்வார், தான், ஏ - அசை I. பிற சமயங் களாகிற யானைகளுக்கு அங்குசம் போன்றவன். ஆழ்வாரை யானையென்று உவமித்ததற்கேற்ப, கவிமதம் பொழியும் என்றும், அவையடக்கம்; புரந்து காவல் செய்து

### வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

தரவு :

குளிப்ப - வணங்க, புனல் - நீர்; வியன் -இடமகன்ற, கெழுமி - நெருங்கி, ஒலக்கம் - கோஷ்டி.

தாழிசை :

அளை - வெண்ணெய், சூது பிடித்து - களவைக் கண்டுபிடித்து;

பெருவிருந்தாய் - பெறுதற்கரிய விருந்து(அவதாரம்) மதலை - பிரகலாதன்; அவுணன் – இரணியன்.

விசும்பு – ஆகாயம், தரு – நீ படைத்த, செலு- செதிள் ( மீன் உறுப்பு )

அராகம் :

பைரவி - காளி, அலகை - பேய்ச்சி ( பூதனை ) பிடி என - " பிடி " என்று சொல்லு முன்; பரிபவம் - அவமானம், பருவரை – மலை போன்ற இராவணன், அறுசமயம் - வைணவம், சைவம், சௌரம், சாக்தம், கௌமாரம், காணா பத்யம், முதுசதுமறைபட - பழைய நான்கு வேதங்களோடு பொருந்த.

**அம்போதரங்கம் :**

பூவடியில் - தாமரை போன்ற அடிகளில்.

**சுரிதகம் :**

அரும்பவிழ் - மொட்டு விரிந்த, சுரும்பு - வண்டு, அவிழ் - மலர்த்தும்; வார் குழை - நீண்ட குழையணிந்த காது, செவ்வி - அழகு, ஒருமுகப்படுத்து - ஒரு சேரக் காட்டி, பொலங்கொடி – அழகிய கொடி, மகளிரில் - பெண்கள் போன்று, கவிப்ப – கவிப்பார்கள். ( ஒரு குடைக் கீழ் ஆள்பவர்கள் ] மாகம் - விண்ணுலகு.

2. மா கவலை - மிகுந்த கவலை, கொன்புரக்கும் - பெருமையுடன் காக்கும், நேமி - சக்கரம், உரக்கும் - திடம் பெறும்.

3. ஒருகைமுகக்குஞ்சரம்-முகத்தில் துதிக்கையுடைய ஒப்பற்ற யானை ( கஜேந்திரன் ), காதருகை முசக்கும் அயல்விழி - காதளவோடிய வேல் போன்ற கண், மான் - மான் போன்ற விழியுடைய என் மகள், முருகு – மணம், முகத்தல் - மோந்து பார்த்தல், சருகு - வாடல், மொய் குழல் - நெருங்கிய கூந்தலையுடைய பெண், என்றும் - என்று சொல்லுவாள், உண்ணாவிதழைக்கும் என்றே இருக்கு – உயிர் மட்டும் இருக்கிறது என்று சொல்லும்படி தளர்வுற்றிருக்கிறாள்.

4. **மதியம் :** பரிதியென்றுதிக்கும் - சந்திரன் சூரியன் போன்று சுடுகின்ற கிரணங்களோடு உதிக்கும், களப லேபனம் - சந்தனப் பூச்சு, கொடுவினை விளைந்தகாலம்– போதாத காலம், கழைக்குலம் தடிந்து - மூங்கில் கூட்டத்தை ஒடித்து, சந்தனம் திமிர்ந்து - சந்தன மரத்தை முறித்து, காழகில் குழாம் - வயிரம் கொண்ட அகில் மரத் தொகுதி, கரிமுக மருப்பு-யானைக் கொம்பு, தரளம்-முத்து சுரம் - பாலைவனம், கடை நிலம் - நெய்தல்.

5. தவசரியை – தவம், சரியை; விகடபகடு - நகைக் கிடமான மதயானை, கபடனை - வஞ்சகனை, மதகளிறு - ஐராவதம், நறை – வாசனை, திவலை - துளி, முகில் வண - முகில்வண்ணனே.

6 மறைமுடி - உபநிடதம், உற - பொருந்த, வெற்பன் - குறிஞ்சி நிலத்தலைவன், வேயின் முத்தம்- மூங்கிலில் உள்ள முத்து; சிவபெருமான்; பிணை - மான், மிடறு- கழுத்து, மாகறை முடித்த மிடறு-நீலகண்டம், கரகபாலம் - கையில் தலை யோடு.

7. ஆகம் - மார்பு. ஆடகன் - இரணியன், கொண்டல் - மேகம் போன்ற நிறமுடைய திருமால், கோகிலம் - குயில், அன்பர் குறை - தலைவர் குற்றம்.

8. குறைக்கொழுந்தாய் - குறைந்த கலைகளோடு கொழுந்து போன்று. தாரை - கிரணங்கள், பிறைக் கொழுந்து ஆர் - சந்திர மண்டலம் தொடும், தம்பி - இலக்குவன்.

9. ஏனம் - வராகம்.

10. வாரணம் - யானை, மாலை - துளவ மாலை, ஆரணம், வேதம்.

11. ஊழி வேல் விழும் கங்குல்- யுகமாக வேரூன்றி விட்ட இரவு, உடுபதி - சந்திரன், அழல் - வெப்பம், மண் கூறு கொண்டது மண்ணைக் கொண்டு அடைத்தது ஒப்பு: " கோழி வாய் மண் கூறு கொண்டதோ! "

12. ஏடு - புற இதழ், கண்ணி - துளவ மாலை, மகரக் குழை - மகர தோரணம்.

13 குழல் - புல்லாங்குழல், கழை - மூங்கில், பால் இசை- பால் போல இனிய கீதம், கூடல் இழைத்தல் - பிரிந்த தலைவி மணலில் கோடு இழைத்துத் தலைவன் வருவனா என்று குறி பார்த்தல், சூள் - சபதப்; வருவதாக ஆணையிட்ட சொல்.

14. பின்னை - நப்பின்னை, பெருமித்தமிழ்முறை கொழித்து. அறிபேரை - தமிழை முறையாகக் கற்று அதன் பெருமையை ஆராய்ந்து அறிந்த தென்திருப் பேரை, கபாலம் நீவி - தாழ்ப்பாளைத் திறந்து

15. மிச்சில்-உண்ட மிச்சம், சரோருகம் - தாமரை.

16. அளவு அறியாப் புனல் - ஆழம் தெரியாத வெள்ளம், வீளவு அறியாப் பேதை - வாய் விட்டுச் சொல்லத் தெரியாத இளம் பெண், மயல் வெள்ளம் - காதல் வெள்ளம்,

17. வாளைப் பகடு - ஆண்வாளை மீன், பிரகு - வேறு உபாயம்.

18. மறு - குற்றம், மரபு - ஆன்றோர் ஒழுக்கம்.

19. வாழி -அசை, குடைந்த முத்து- முத்தைக் குடைந்து செய்த, மருங்குல் - இடை, சூழி - நெற்றிப் பட்டம், துவக்கி - கட்டி, மேழி - கலப்பை, ஆழிவலம்புரி - சக்கரம், சங்கு.

20. கழல் ஆடிலாள் - கழற்காய் விளையாடவில்லை. சுனை ஆடிலாள்-நீராடவில்லை, கலை போடிலாள்- மேகலை அணியவில்லை, பீடு - பெருமை.

21. வீண் மொழி கொள் - வீண் வார்த்தை பேசுகின்ற, ஆராத - திருப்தி அடையாத, பேரேசர் - தென் திருப்பேரைக் கடவுள்.

22. செங்கனிக் கோவை வாய் - கோவைப் பழம் போல் சிவந்த வாய்.

23. அயராமல் - மறவாமல், பிறங்கலமின்னே - மலை யிலுள்ள பெண்ணே. தாரை- முனை, குழல் காரை- கார் போன்ற கூந்தல்.

24. படாம் -துணி, குழை பிடித்து- குழையணிந்த காதை பிடித்து.

25. மாரன் - மன்மதன், கா - சோலை, செற்றார் - பகைவர், தீ வெடிப்ப வெடிக்குமோ - தீத் தோன்று வது போலத் துளவ மலர்கள் சிவந்து தோன்றும்.

26 வெடித்து - வெடிப்புகள் தோன்றி, யாலைக்கப் பாலை - பாலை நிலத்துக்கப்பாற்பட்ட, அந்தணீர் - முக்கோல் பகவர்களே, செம்பஞ்சு-மருதோன்றி பூசிய சிவந்த நிறம், அனிச்ச மலர் - மென்மையான ஒரு வகைப் பூ, தடித்துச் சிவந்து - வீங்கிச் சிவந்து போயின, மடந்தை - என் மகள், முக்கோல் பகவரை வழிவினாதல் என்னும் அகப்பொருள் துறை.

27 மறம் : இது கலம்பகத்தின் ஒரு துறை. மணம் பேசத் தூது வந்தவனை மறவர்தம் குலப் பெருமை சொல்லி மகட்கொடை மறுத்தல். அரிட்குறு - அருளைப் பெற்ற, தையலை - பெண்ணை, சருகு - ஓலை, வேள் - முருகன், வேல்பட - வேலாயுதமும் தோற்க, வினையொத்த-போர்த் தொழிலைச் செய்த நாகொடுத்த படை பாடெடுத்த நிலை - நாள் முழு வதும் எடுத்த ஆயுதத்தைப் பக்கத்தில் வைத்து விடுவதில்லை. நாணயப்பிழை - நா நயப் பிழை; பேசுந்திறமையிலுள்ள பிழை. நரபதித் தலைவர் - தலைமை பெற்ற அரசர்கள், நமனெதிர்த்து வருமா யினும் - எதிரி எமனேயாயினும், மனு வரம்பு - மனித ஜாதியின் வரம்பு, மற வரம்பு - வீர மறவர் குலத்தின் ஒழுங்கு.

28 இல்லத்தடங்கா - வீட்டினுள்ளே தங்கியிராத, பசிக் கென்று - பசி என்று, ஒன்று - ஒரு பொருளும், சொல்லத் தெரிவல்யா - சொல்லி முடிவு காணாத, எழு பிறப்பு - எழுவகைக் கதி, துடைக்கும் – நீக்கும், தாள் அளக்கும் - தாள்களால் அளந்து கொண்ட, புவி மருங்கில் - பூமியின் எல்லாப் புறங்களிலும், கொதியார் - கோபிக்கமாட்டார். மதன்படை – மன்மதன் படைக்கலங்கள், குழலிசை – வேய்ங்குழல் ஓசை, அளித்து - தலையளி செய்து, அயர்த்துக் கொடுத்த - மறந்து பிரிவுக்குச் சம்மதித்த.

29 சம்பிரதம் - ஜால வித்தை, கடலடங்கலுழிதொறு சிறங்காக புனல் கடுகிலும் புகுதும் - கடல் நீர்

முழுவதும் ஒரு கைக்குள் அடக்குவோம்; கடுகிலும் புகுவோம் என்றும், கடல் எல்லாவற்றிலும் ஒரு கை தண்ணீர் மொண்டு விரைந்து வந்திடுவோம் என்றும் பொருள் கொள்க. வடமேருவும் ஊசிவேருடன் இடது புறமும், வலதுபுறமும் சுழலும்படி செய்வோம் என்றும் ஊசிவேரைக் கொண்டு வடமேருவை இடது புறமும் வலது புறமும் சுற்றிச் செல்வோம் என்றும் பொருள் கொள்க. பரவையுலகு - கடல் சூழ்ந்த உலகம், பகலிரவு கொண்டதும் - பகலை இரவாக்கியதும்.

30 சோவியர் - இடைப் பெண்கள், அடிக்குங் கை மானோ – அடிப்பதற்குக் கையில் எடுத்த கோலோ, காது பிடிக்கும் - தோப்புக்கரணம் போடுவதற்கு இரு கைகளால் காதுகளை மாற்றிப் பிடிக்கும், கைம்மாறு- உதவி.

31 தருவிட – விடத்தைத் தருகின்ற

32 உறைக் கோடும் வாள் – உறையில் விரைந்து புகும் வாள், ஒரு கொம்பிறந்து - கொம்பு வெட்டப்பெற்று, குறைக் கோடு - கோடு, உழல் குஞ்சரம் - திரிகின்ற யானை, துறைக்கோடு - நீர்த் துறையில் கிடந்த சங்கு, தென்னர்-பாண்டியர், பண்டைச் சிறைக்கோடு மேகம் –பாண்டியர் சிறை வைத்த மேகம், பாண்டியர் மேகங்களைச் சிறையிலிட்ட திருவிளையாடல், பிறைக்கோடு - பிறை போலும் கொம்பு.

33 அறந்தானுற உரைத்தருள்வீர்-இப்பறவொழுங்கைப் பொருந்த எடுத்துரைப்பீர்.

34 அழைத்துரையும் - பொருந்தச் சொல்லுங்கள், பெண் மதி - பெண்ணின் பேதைமை, பேதை நாட்டு - பேதைமையுடைய என்னுடைய நாட்டிலுள்ள.

35 நிழல் பிழிந்து பருகவென்று நினையும் அசுர மருதம்- நிழலிலே, உயிரைப் பிழிந்து குடிக்க வேண்டுமென்று நினைத்த அசுரர்களாகிய மருத மரங்கள், குரிசில் -

சிறந்தவன், அழல் பிழிந்த வேலர் - நெருப்பைக் கக்குகின்ற வேலையுடையவர், ஆணை -சூள், சபதம் அந்த வாய்மை - தவறாத அந்தச் சொல்,

36 மையுண்டு -மை தீட்டப் பெற்று, அறிவுண்டு-மதியை மயக்கி, ஆவியுண்டு - உயிரைக் குடித்து; காவி - நீலோத்பல மலர் போன்ற கண்கள், தாமரைக்கே - தாமரை போன்ற முகத்தில், வளர்ந்த -நீண்ட காலம் தங்கிய, வாவி - குளம் பூவை - பூவிலுள்ள மதுவை, கால் கிளர்ந்த - சென்ற.

37 புறத்து - அருகில், வள்ளைத் தண்டு - வள்ளைத் தண்டு போன்ற காதுகள், வடித்து - பெருக்கி, உவட்டாத - தெவிட்டாத, உங்கள் பாலில் - உங்களிடத்தில்.

38 பிடித்தீர்தழை - வில்லையொழித்துக் கையில் தழையை வைத்திருக்கிறீர், கெடுத்தீர் கரி - யானையைத் தவறவிட்டதாகக் கூறிக் கொள்கிறீர். பிணைத் தேடுவதேன் - ஆனால் ஏன் மானைத் தேடுகிறீர். அடித்தாமரை - தாமரை போன்ற மெல்லிய கால்கள் வருந்த, அடைத்தாளுவதோர் தொழு - அடைத்துக் காக்கின்ற தொழுவம், புனச் சார்பு - தினைப்புனம், தொடி - வளையலணிந்த.

39 அண்டர் – தேவர்கள், தொரும்பாக்கி - அடிமையாகி அடவி - சோலை, அலர் - மலர், எழும் பாக்கியம் - பாக்கியம் கிட்டும், இந்து - சந்திரன், விட்டம் - அடிப்பாகம், சரணாரவிந்தம் - பாத தாமரைகள், பண்டு - முன்.

40 செய் - வயல், தொய்யில் - மங்கையர் மார்பில் சந்தனத்தால் போடும் கோலம், தொழிலுக்கு - என்னை வருத்தும் செயலுக்கு, அரும்பும் -தோன்றும் மதன் - மன்மதன், எய்தில் - எய்தால் ( என்னைத் தழுவிக் கொண்டால் ), கரும்பும் கணையும் இலை – எனை வருத்தும் படைகள் உங்களிடம் இல்லாது போகும், இறவாதிருப்பன் - பிழைத்துப் போவேன்.

41 இரும்பு - அங்குசம், துதிக்கை மடுத்து - மாரினைத் துதிக்கையில் மாட்டி, கோ மகளிர் - அரச குலத்துப் பெண்கள், விரல் - விரலால், எதிர்த்தார் - பகைவர், சுரும்பு - வண்டு, வழிகறங்க - வழியில் சுழலும்படி, செவிப்படலம் - செவியின் பரப்பு, துங்கம் - சிறப்பு, பவனி - குழைக்காதர் வரும் வீதியுலா, விரசம் - காதல் துன்பம், தொழுதாள் - தொழுத தலைவி, முடப்பலவு - வளைந்த பலா, படலைக் குலை- பரந்த குலை, மடல் - பாளை, குரும்பை - இளநீர், வரால் - மீன்.

42 மத்த வேழம் - மதம் பிடித்த யானை, பதி - தலைவி யின் ஊர், தாமரைப் பூ - இலக்குமி உறையுமிடம், கோனென்பார் - தலைவர்கள், கொம்பே- பெண்ணே வம்பே - வீணாக, அல்ல - வேறொருவன், இல்லை - ஒன்றுமேயில்லை, கோட்டி - வார்த்தை, எதிருரைப் பார் - பதில் சொல்வார்.

43 நலம் - அழகு, முனிவாய் – கோபங் கொண்டு.

44 அமுதுா நினையீர் என்று கூட்டுக. ஆனாத - அழி யாத, மானரார் - மானம் நிறைந்த, காமத்தின் பால் – காதலின் பகுதி, அறத்தின் பொருட்டு - இல்லறம் நடத்த விரும்பி, பொருட் பால் - பொருளைத் தேடி, திருக்குறளில் காமத்துப்பால் சிறிது, அறத்துப்பால் நடுத்தரம், பொருட் பால் மிகப் பெரிது

45 சூல் - கருப்பம், மேல் வடிவு - பெரிய வடிவம், வினை தொலைக்கும் - அழிக்கும்

46 தோடு - புற இதழ். ஐவர் - பஞ்ச பாண்டவர், சாடும் - சொரியும்.

47 கொண்டல் - மேகம், அண்டர் பூமி - தேவலோகம், நீரமோ - நீங்களோ - முன்னிலைப் பொருளில் வந்த தன்மை.

48 மருந்தேறல்-மணம் பொருந்திய தேன், மால்-ஆசை, கதலிக்குருத்தே விசும்பளக்கும் பேரை - வாழைக் குருத்துக்களே ஆகாயத்தை எட்டிப்பிடிக்கிற-உயர்வு நவிற்சி அணி, கடிதாய் - விரைவாய், அன்பர் - தலைவர்.

49 பாயல் - படுக்கை, மகிழ்ந்த - விரும்பின, திருப் பேரையை மகிழ்ந்து பாற்கடலை விட்டு வந்தார் என்று பொருள் கொள்க. கசப்பாக - கசப்பாக்கி, பாகு - தேன்பாகு, ஆவியிருந்து - உயிர் வாழ்ந்து, சஞ்சரித்து - நடந்து - திரிந்து, விரிஞ்சன் - பிரமன், விரிஞ்சனும் படைத்தான்.

50 விதிக்கும் தொழில் - பிரமன் படைத்த செய்கையி னால், வெவ்வேறுபல - வேறுவேறான பல, கோலம்- வேடம், ஒருவனே பல கோலங்களில் நடிக்கிறான், அதுபோல ஒரு உயிர் பல உடல்களில் பிறக்கிறது, எதிர்க்கும் - எதற்கும், யானை முதல் எறும் பீறாக, குதிக்கும் கலுழி - வெள்ளமாகப் பொங்கி வரும், சுவடு - கால், குறுங்கள்-சிறிய கள், வேட்டு-விரும்பி தெவ் - பகைவர், மத்தகம் - யானைத் தலை, பனை- பெருத்த.

51 தொண்டன் - தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

52 வேள் - விருப்பம் சங்கம் - சங்கு வளையல், மாது - மாதர், அணி - வரிசை, வேள் - மன்மதன்.

53 ஆடவர் - தலைவர்.

54 அயல் - அயலார், வெதுப்ப - சுட, வேள்போர் - மன்மதன் செய்யும் போர், மறலி - எமன், புடை - பக்கத்தில், கடல் வளை - கடல் சூழ்ந்த, புடவி - பூமியிலுள்ளார், முயங்கு - உடலிற் கலந்த, வெறி - மணம், பெறவிட்டது - தலைவி பெறத் தலைவன் அளித்தது, சுரும்பு - வண்டு, வெறுப்பிலதாகி - விருப்பங்கொண்டு.

55 தாரை - ஒழுங்குமுறை.

56 திவலை - தயிர்த்துளி, கதவுக்கடை - கதவின் அருகில், உயரத்து - உயர்ந்த இடத்திலுள்ள, மல் தொழில் பிடி - மற்போரில் செய்கின்ற பிடிகள், துரந்தன - செலுத்தின, களவிட்டு - வஞ்சகமாக வந்த, அலகை -பேய்ப்பெண் பூதனை, பணைவரை- பெருத்த மலை, படியில் - பூமியில், துடை-தொடை, கனகன் - இரணியன், உருள்பட - உருள, பகழி . அம்பு, கதிருட் புதை அத்தமனம் - சூரியன் மறைந்த அந்திப்பொழுது, நிழல் கெழுமிய - ஒளி நிறைந்த, திகிரி - சக்கரம், பருமச் சிகரம் - உயர்ந்த உச்சி, பலி-பிச்சை, பரிசில் - வெகுமதி, பருமத்து வலித்து- பெரிய மத்தை இழுத்து, விளம்பின - பறிமாறின, தெளி - குழம்பு, தொடை - மாலை, மிருகமதம் - மான் மதம், கத்தூரி, பொதுவியர் - இடைச்சியர், கமலத்தவள் - இலக்குமி, புளசம் - மயிர்க்கூச்செறிதல், புழை - துவாரம். வலம்புரி - சங்கு, எக்கர் - மணல், குருகையரதிபதி - நம்மாழ்வார். பரவுநெடுந்தகை-போற்றப்படும் பெரியோன், பரகதி-மோட்சம், முதலவன் - முதன்மையானவன், அளி - அழகிய,

57 புயங்க சேகரம் - அரவணிந்த, முயங்கு-பொருந்திய, நாடகி - நடிக்கின்ற பெண், காளி, புரிந்த வாய்மை- சொன்ன சொல், கெவுளி-பல்லி சொல், பொலாதல - நன்மை செய்யும் குறிதான், இருந்த மாநிலம் -வாழ்கின்ற ஊர், இணங்கவேயிசைந்து - சம்மதம் பொருந்தி, இலங்கிழாய் - விளங்கும் ஆபரணத்தை யுடைய பெண்ணே, சேவகர் - வேலை செய்வோர், நாவலர் - புலவர், உயங்கி . வருந்தி, உடந்தையாய் - மனமிசைந்து, சிறங்கை - கைகொள்ளு மளவு, தூசு - கூட்டத் தலைவர் ஐந்துபேர் - நன்கு விளங்கவில்லை, திருமால், சிவன், அயன், விநாயகன், முருகன் இவர்களைக் குறிக்கலாம், பசியால் அழுத குழந்தை வாய்மூடச்சிறங்கை கூழிடு; உறங்கக் கந்தை கொடு என்பது பொருள்,

58 கொற்றியரா - கலம்பகத்தின் உறுப்பு, வைணவ சின்னம் பூண்டு பிச்சைக்கு வருவோர்கள் மீது காதல் கொண்டு ஒரு காமுகன் கூறுவதாகச் சிலேடை பொருள்பட வருவது இச்செய்யுள். வயலகம் - வயலிடம், தாமம் - மாலை, தாமரையின் மாமணி - தாமரைக்காய் மாலை, அரும்பித்த-மலர்ந்த, நாமம்- திருமண் காப்பு, தாவடம் - முத்து மாலை, அரங்கு - நாடக மேடை, ஒற்றி - இசைந்து, மருங்கொற்றி - அருகேயிருந்து கவனித்து.

59 பூவணை - மலர்ப் படுக்கை, அமுதுரு - அமுதம் போன்ற வடிவம்.

60 உயிர் முடிக்கும் - உயிரை அழிக்கும், செவ்வந்தி - சிவந்த அந்தி மாலை, மயிர் முடி - கூந்தல், செவ்வந்தி - செவந்திப்பூ, மருந்துளதி - வாசனை பொருந்திய துளசி, மயல் - ஆசை,

61 பொருப்பின் - மலையிடத்தே, முயல் - சந்திரன் கறை, மதி-சந்திரன், முகவட்டம்-முகத்தில்பொட்டு, புயல் - மேகம், புளகிக்கில் - புளகித்தால், கூச்சமடைந்தால், அற்பஇடைவேரற்றுவிடும்; ஆகையால் திலகத்தை அழித்துவிடுவீர், அழகு - நல்லது.

62 நுவலவும் படுமோ - சொல்லும் தரமோ. மழை - கூந்தல், கடல் - கண்; மலை - கொங்கை, கொடி - பெண் கொடி காட்சி யென்னும் துறை,

63 பொதும்பர் - சோலை, இதண் - பரண், அபிஷேகம்- முடிபோறாள், புனம் - தினைப்புனம், கரையேறுமே- மாசூல் கைக்குக் கிடைக்குமோ ?

64 களி - குடியர்களைச் சிறப்பித்துக் கூறுவது, களியர் - குடிகாரர், நறவு - கள், இலச்சி யாகினி வலச்சி - பரவும் தெய்வம், பஞ்சமி - கள், மந்திரப் பெருமை - மந்திர சக்தி.

65 அல்லி - அகவிதழ், பணிலம் - சங்கு, மணி - முத்து, வனசம் தாமரை.

66 ஆரம் - முத்து, வேம் - வெப்பந்தரும், நேர - எனக்குக் கிடைக்கும்படி.

67 மாரசரம் படு பூ - மன்மதன் அம்பாக விடுகின்ற பூ, ஆரவடம் - முத்து மாலை.

68 மந்தி - பெண் குரங்கு, இதழி - கொன்றை, தாளம் முத்துப்போன்ற கண்ணீர், ஒழுங்கு - நியாயம், ஞான வரோதயன் - சிறந்த ஞானத்தால் அறியப் படுவோன்.

69 புரிசை மதில், புயல் - மேகம், துவக்கும் - கட்டும்.

70 எழும் - செய்யும், பளிங்கு மண்டபம் - கண்ணாடி மண்டபம், நிழற்கோலம் – பிரதிபிம்பம், ஆயிழை ஒருத்தி - வேறு ஒரு பெண், ஆடகன் - இரணியன், உரம் - மார்பு, திருந்தெழில் - சிறந்த அழகு.

71 உரிசை - ருசி, உறை - கிணற்று விரிசுவராகிய உறை, கூவல் - கிணறு, பதியில் - ஊரில் தங்கி, எயினர் ஒருவர் போகிலர் - வேடர் ஒருவர் கூடப்பே ாகவில்லை, ஓ! கொடிது - மிகவும் கஷ்டம்,

72 கொடியள் அந்த அசோதை - கொடுமை செய்து பிரசித்தி பெற்ற அசோதை, மாறு - விளார், பிரம்பு; குழைதொடும் - தோப்புக்கரணம் போடக் காதைப் பிடிக்கும், அடியளந்த - காலால் அளந்த, ஆழி - சக்கரம், அமரக்க ால் - தெய்வத்தன்மை வாய்ந்த கால், படியளந்தது - பூமியை அளந்தது உணவு கொடுத்தது. பாலன் - காத்தற் கடவுள், மிடியளந்த- வறுமையிலே வளர்ந்த, தொட்டுண்டது - களவி லுண்டது,

73 வாய் மடுக்கும் - வாயிற் கொண்ட, இடும்பை - துன்பம், கனிவாய் - கனிந்து, செழுந்தாள் - பெருத்த கால்கள்,

74 வளை - வளைந்த, நாவாய் - நாக்கையுடையவாய், தோணி, நடு - நடுவுநிலைமை.

75 எழுதா - எழுதி.

76 கேடில் - வராகம், அறிகின்றதே பேசுவீர்.

77 தாழை - தென்னை, ஞாழல் - குங்கும மரம், சூர் - மூங்கில், மூடு - மரம், சுரம் - பாலை நிலம், ஆயர் நிலம் - முல்லை, வலைவாணர் - நெய்தல் நில மக்கள், கழை - தோணியைத் தள்ளும் மூங்கில் கம்பு, உந்தி - தள்ளி, ஆரம் - சந்தனம், முடிகூடு - மயிர் முடியில் ஏற்படும், வால் வளை - வெள்ளிய சங்கு, கோடு - உச்சி, மேழி - கலப்பை, மேதி - எருமை, ஆன் - பசு, மலங்க - வருந்த, எக்கர் - மணல்மேடு, மறுகால் - நிறைந்த தண்ணீர் வடியுமிடம், உரையாளி - மாற்று அறிவிக்கும் ஆளி, உம்பரூர் - தேவலோகம், சருவாமல் - திகைக்காமல். ஒரு பூதர் - ஒரு மனிதர், அஞ்சுதலை வாசல் - ஐம்பொறி, தாழிடு - தாழ்ப்பாள் போடு, குகை - பொன்னையுருக்குங் கூடு, அரிதாரம் - உருக்குவதற்குப் பொன்னுடன் கலக்கும் மருந்து, விடிவேறு - விடியும் பொழுது, வாரம் பட்சம், அமுது - உணவு, தலைவாழையிலை - பெரிய வாழையிலை, என்னுயிர் - எனக்கு மிகுந்த விருப்பம், கயல், தேளி, சாளை - மீன்வகை, மாரி - மழைபோல, பணியாரம் - பட்சணம், அப்பு - பூசு, சந்தரம் - சந்தனம்.

78 தடம் - சுனை. மருங்கு - இடை, நீட்டூரம் - கொடுமை, காவி - கண்கள்.

79 உறிமுகப் பாலையே - உறியிலுள்ள பாலையே, சயன போகம் உகப்புத் தலம் - படுக்க இனிதாய்

மகிழ்ச்சி தரும் இடம், ஆலையே - ஆலிலையையே, பங்கயத்தாளையே - தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியையே, தேவர் கோன் அங்கை அத்தாளையே விரும்பும் என்று பொருள், ஆயனேயென்று உதிப்பதும் - கண்ணனாக வந்து அவதரிப்பது. பன்னி – சொல்லி, மாயனே - மாயையுடையவனே, திருப்பேரையே - அழகிய திருநாமங்களையே; திருப்பேரையென்னும் ஊரையே.

80 இச்செய்யுள் கடைமடக்கு. வேரி - மணம், வேள் காரியம் பறை - மன்மதன் தொழிலைக் கூறும், வாரி - கடலை, மானுமே - நிகராகுமே.

81 மதி, வள்ளை, குமிழ், குமுதம், வேல், சிலை இவை முறையே முகம், காது, மூக்கு, வாய், கண், புருவம் இவற்றுக்கு உவமை. மான் - சந்திரன் களங்கம், கலை - சந்திரகலை, குருகுலம் - குருகுல வாசம் பண்ணி, திரு - இலக்குமி போன்ற மகள், வழிபட - வணங்கி வழிபட.

82 காரை ஊர் - மேகத்தில் பொருந்திய, வண்ணர் - நிறத்தை உடையவர். விசயன் - அருச்சுனன், தேரையூர்மால் - தேரை ஓட்டுகிற கண்ணன், தேரையூரிலுள்ள விஷ்ணு; பின்னை மால் - நப்பின்னைப் பிராட்டியிடம் காதல், மால் கொண்டிருந்தால் - அறிவு மயக்கம் கொண்டிருந்தால், பின்னைப் பேசாரோ - அதன் காரணமாகப் பேசமாட்டாரோ ?

83 அம்மான் - மாமனாகிய கம்சன், நகையும் சுடுகின்ற சிரிப்பையும் ஒழித்துக் கொன்ற, பேரை - பேரையில், இவள் - தலைவி, ஆவியுண்டது - உயிர் கவர்ந்தது, பெம்மான் - சிவபெருமான், சிலை - வில்லாக, வட வரை - மகா மேருமலை, செற்றது - அழித்தது, முன் - முன்னே, தோன்றின, திருநகை அழகிய சிரிப்பு.

84 நகை – ஒளி, புரையும் – ஒக்கும், பேரையகம் - பேரைத்தலம், தாமரையமுதம் - தாமரையில் இருக்கும் இனிய இலக்குமி அன்னாள் - ஒப்பான வள். பிடித்த - கொண்ட, தரம் பிடிக்க மாட்டாமல் - அழகின் தன்மையறிந்து ஒப்பாக மாட்டாமல், வாள் பிடித்தது - வானத்தில் ஓடி ஒளிந்தது.

85 மதிக்கும் - எல்லோரும் பாராட்டும், மதிவார் சடை முடிக்கும் பெருமான் - சந்திரனை நீண்ட சடையிலே சூடும் சிவபெருமான், அயனார் - பிரமன், எனும் - என்று தலபுராணம் கூறும். மறை நூல் - வேதம், துதிக்கும் புகழைக் கூறும், தொலைக்கும் - தீர்க்கும், இறக்கும் குழை-நீண்டு தொங்கும் காதணி, கொதிக்கும் பதம்–மிகுந்த வெப்பம் தரும் நிலை, அதிக்கும்- அதிகரித்துக்கொண்டே வரும். தூதை - பானை சோறிடும், பசி மாறிடும்; அறத்தின் பயனாவது இது தான். அறம் - இல்லறம்.

86 வேயிருந்திசைத்த-புல்லாங்குழலை வைத்து ஊதின, விண்ணொடு - விண்ணில், மேகம் - மேகம் போன்றவன், பேய் - பூதனை, நாறும் - கமழும், துணை - இரண்டு, வாசடம் - வைத்திய நூல்.

87 மதங்கியார் - வாளைக் கையில் பிடித்துச் சுழற்றியிடுகின்ற பெண், சாடு - சகடு, வண்டி; மடிபட-இறந்து வீழ, முருகு வாசனை, உலாவும் - போன்ற. ப்ரதாபம் - புகழ், இருவெட்டு - இரண்டாகப் பிரிந்த தொய்யில் - மகளிர் மார்பில் அணியும் சந்தனக் கோலம், பிறைக் கொழுந்து - சிறு பிறை போன்ற நெற்றி, திலகம் - பொட்டு, இயமனுக்கு உயிர் பறிக்கும் உபாய வித்தையென்று கூட்டுக.

88 மதிக்குழவி - பிறை, முடித்தார் - சிவபெருமான், மால் - விஷ்ணு, ஆசை; வயிரங்குன்ற - வயிரமும் ஒப்பாகாத, வள்ளம் - கிண்ணம், சுளிப்ப - கோண,

கைப்ப - கசப்பாக. படுகொலைசூழ் - கொடுமையான கொலையைச் செய்கிற, அள்ளி - முகந்து.

89 புரிசை - மதில், அணங்கு - பெண், சுணங்கும் - வருந்தும், பிடி - பெண் யானை, கடா யானை - ஆண் யானை, இறைவர் - தலைவன், கொடியில் - பூங்கொடி போல, துவக்கும் - கட்டும், முரிக்கழை - வலிய மூங்கில், கழைக்கு - கழையில். உறவே - பொருந்தும்படி, அணங்கே, நும் தாள் சாரல் கழைக்கு உறவே, புரிசைக் கொடியைத் துவக்கும், இறைவர் தம்மை கருந்தாள் கொடி துவக்குவது போலத் துவக்கும். ஏன்? பருந்தாட் கொடிய தென்றோ? என முடிவு காண்க, தலைவனுடன் சுரம் போக்குக்கு உடன்பட்ட தலைவியைத், தலைவன் ஊர் அதி சமீபத்தில் இருக்கிறதென்று தோழி தேற்றுதல், ஊரளித் தென்றல் என்ற அகப் பொருள் துறை.

90 கழைக்கு ஆவலான தழல் - மூங்கிலை விரும்பிப் பற்றுகிற தீ, கொதித்தேறு - வளர்ந்து கொண்டே செல்லுகிற, பாலை வழி - பாலை நிலத்தினூடே போகிற பாதை, இராமல் - உட்கார்ந்து இளைப் பாறாமல். சரத்தூரம் அம்பு போடுகிற, கமல மலர்த் தாளுருமல் - தாமரை போன்ற அடிகள் வருந்தாமல். மணி - இரத்தினங்கள். மழைக்கார் - மழை மேகங்கள் சூழல் - மேடுகள், வாவும் - தாவி வருகின்ற, நீழல் களும் உளவே என்று முடிவு காண்க.

91 மேதி - எருமை, பாசடை - பசிய இலை, வேரி - தேன், தீது - தீவினை, ஓதி - கூந்தல், கயிற்றில் ..............உரல் பிணிக்கவும் - கயிற்றின் ஒரு நுனி யைக் காலில் கட்டி, மற்றொரு நுனியை உரலைச் சுற்றிக் கட்டவும், சுருதி - வேதம், கேட்கப்படுவது.

92 காடு - புனம், பூங்கால் - பூவைப்போல மென்மை யான கால், காவலார் - காவல் செய்பவர், ஆரரிந்த- ஆர முழுவதும் அரிந்த.

93 சிறு மதலை - சிறுபிள்ளை, மதலை - பிள்ளையின் பொருட்டு, தரங்கம் - அலை, பொருனை - தாமிர வருணி நதி.

94 ககனர் - ஆகாயத்திலுள்ளவர், முக்கணர் - சிவ பெருமான், மதலை - சிறுதொண்டன் பிள்ளை, கறி சமைத்தவள் - சிறுத்தொண்டன் மகன் இராமன், விளையவைத்தவள் - கைகேயி, மதனைவிட்டவள் - தலைவன் தாய்.

95 முரி - சோம்பல், விறலியர் - டாணன் மனைவிகள், பெருமையுடைய அரசியர்; துதிக்கை கொண்டு - துதிப்பதினால், தும்பிக்கையினால்; முடிகளைச் சரிக்கையால் - அரசர்களை வெல்லுகையால், தலைகளை வணங்கச் செய்கையால், கடம் - மதஜலம், கடன்.

96 பாண் - பண், இசை; மிழற்றும் - மழலையிற் பேசும், சுரும்பு - வண்டு, மாந்தி - குடித்து, மதிவண் குளி - சந்திகளின் துண்டுகள், அவிழ்த்தும் - மலரச் செய்தும், சுண்ணம் - வாசனைப்பொடி, பளிக்கறை - பளிங்கு மண்டபம், குயிற்றும் - அமைத்திருக்கிற, சாளரம் பலகணி, நாண் - நாணத்தை, வேள் - மன்மதன். நாண் - வில்லின் நாண், ஞான புங்கவ - அறிவிற் சிறந்தவனே, நந்தா - அழியாத.

97 நந்தா வளம்-அழியாத வளப்பம், பிறந்த-தோன்றிய மால் - குழைக்காதர, வந்தார் - வந்தார் என்ற. வளம் பிறந்த-பெருமை தோன்றும், வார்த்தைக்கே- பேச்சுக்கே, வண்ணம் - நிறம், உதித்த - எழுந்த, மாமதி - பூர்ண சந்திரன். பசலை - நிற வேறுபாடு, மாயம் - காரணம் அறிய முடியாத கொடுமை, குதித்தது- திடீரென்று தோன்றிற்று.

98 கவுள் கன்னம், கவுளிலிருந்து குதிக்கும், துளிமழை- தூற்றல் முற்றிச் சொரியும் மழை, குஞ்சரம் - கஜேந் திரன் என்னும் யானை, அழைக்கும் - ஆதிமூலமே என்று கூப்பிடும், புயல் - மேகம் போன்ற குழைக்

காதர், கொழிக்கும் தமிழ் வளர் - தமிழ் செழித்து வளர்கின்ற, பேரை - தென்திருப்பேரை, தழைக் கும்படி - மதிப்பில்லாத குடும்பம் சிறந்த மதிப்படை யும்படி, பெண்டுகள் வளர்க்கும் பெண்களால் வளர்க் கப்பெற்ற, மயில் - மயில் போன்ற பெண்ணே, சிறிதென்று விதிக்கும்படி படிக்கும் அனிச்சங்களும் - சிறிதென்று தீர்மானிக்கும்படி நாமறிந்த மென்மை யான அனிச்சப் பூக்களிலும், பஞ்சினும் உற - பஞ்சி லும், பட்டாலும், உனது பதம் வெறுக்கும் - உனது கால்கள் நோகும், " அனிச்சமும். அன்னத்தின் தூவியும் மாதர், அடிக்கு நெரிஞ்சிப் பழம்," என்ற குறளைக் காண்க. உதிக்கும் கதிர் கொதிக்கும் சுடர் நடக்குந்தொறும், வெறுக்கும் பரல் உறைக்கும் பொழுது நீ உயிர் வாடுவை என்று கூட்டுக. உயிர் வாடுவையே - தாங்கிக் கொண்டு உயிர் வாழ முடியுமா ?

99 வாடை - வடக்கேயிருந்து வரும் காற்று, இயங்க - வீச, பீடை - வருத்தம், தென்றலங்கன்று - இளந் தென்றல், தென்றல் -தெற்கேயிருந்து வரும் காற்று, கோதுபட - கொத்தென்று நீக்கவைத்த, கூடல் - கூடலிழைத்தல், அள்ளியிட்ட - வாரிச் சொரிந்த, பயிர்ப்பு - பிறர் பொருளைத் தீண்டின வெறுப்பு, துணைபட - உயிர்த்துணை பிரிந்தால், இரிந்து - ஓடி, புரக்க - காக்க, வார் - நீண்ட, பூதரம்-மலை போன்ற தோள், ஐவர் - பஞ்ச பாண்டவர், அணங்கு - படர்ந்து வருத்தம் செய்கிற, பொதும்பர்- சோலை, தண்ணளி - தலையளி, குரும்பை - இளநீர் புயம்-தோள், பாகுற-பக்கத்தில் பொருந்த, பரிபுரம்- பாதசரம், சில்லொலி - சில்லென்ற ஒலி, பல்கலன்- பல ஆபரணங்கள், புலவி - ஊடல், கலவி-புணர்ச்சி,

100 பதக மலம் - குற்றமாகிய அழுக்கு, பத கமலம் - அடித்தாமரை, பூக்கும் - தோன்றும்.

101 மோலி - கிரீடம், பவளம் - இதழ், சுரிமுகம் - வளைந்த அடிப்புறம், ஆழி - சக்கரம். கதை-தண்டா யுதம், பீதாம்பரம் - பொன்னாடை.

# குழைக்காதர் பிள்ளைத்தமிழ்

## நூல்முகம்

### பிள்ளைத் தமிழ்

‘ பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறுத்
தொண்ணூற் றுறெனுந் தகைய ’

எனப் ‘ பிரபந்த மரபியல் ’ சிற்றிலக்கியங்களை வகைப் படுத்துகிறது. சிற்றிலக்கியங்களில் முதலிடம் பெறுவது பிள்ளைத்தமிழ். பாட்டியல் நூலார் பலரும் பிள்ளைத் தமிழுக்கே முதலிடம் தந்துள்ளனர். இது சீரும் சிறப்பும் பெற்றுச் சிறந்திருக்கும் பிரபந்தமாகும். இவ்விலக்கிய வகைக்கு வித்து பழந்தமிழ் நூலான தொல் காப்பியத்தில் உள்ளது. என்பதினை

‘ குழவி மருங்கினும் கிழவதாகும் ’
(தொல்: பொருள் : புறத். 29)

என்ற நூற்பா விளக்குகிறது.

பிள்ளைத் தமிழ் வாழ்வின் முதனிலை என்பதால் மட்டும் மேன்மை அடைவதில்லை. பிரபந்தங்களுள் முதன் முதல் உருபெற்றது இதுவே எனலாம். பெரியாழ்வார் தம் திருமொழியில் கண்ணனின் பிள்ளைப் பருவத்தில் நிகழ் வனவற்றைப் போற்றிப் பாடி சிறந்த சொற் சித்திரங்க ளாகப் படைத்து பிள்ளைத் தமிழுக்குத் தொடக்கம் செய் துள்ளார். நாச்சியார் திருமொழியில் ‘சிற்றில் சிதையேல்’ என சிறுமியர் விண்ணப்பம் செய்யும் திருமொழி உள்ளது. பெரிய திருமொழியில் திருமங்கை மன்னன் ‘ சப்பாணிப் பருவம்’ பாடுகின்றார். இராகவனுக்குத் தாலாட்டுப் பாட குலசேகரப் பெருமாள் ‘தாலேலோ’ எனப் பாடியுள்ளார். ஆண்டாளும், குலசேகராழ்வாரும் பிள்வளக்கவி யமுதைத் தெவிட்டாத இன்பமாக வாரிவழங்கித் தந்திருக்கின்றனர்.

பிள்ளைத் தமிழில் விரும்பும் தெய்வத்தையும் மக்களுள் சிறந்தாரையும் பாட்டுடைத் தலைவனாகக் குழந்தை நிலையில் வைத்து அப்பருவ நிலைகளைப் பாட்டுடைத் தலைவர்மேல் ஏற்றிப் புகழ்ந்து பாடுவதே பிள்ளைத்தமிழ் நூல்களின் பொது இயல்பாகும். எனவே இதனைப்

'பிள்ளைத் திருநாமம்' 'பிள்ளைக் கவி' 'பிள்ளைப் பாட்டு' எனவும் வழங்குவர்.

'மூன்று முதல் இருபத்தொன்றனுள் ஒற்றை பெறு திங்கள் தனிற் பிள்ளைக் கவியைக் கொள்ளே' எனச் சிதம்பர பாட்டியல் பிள்ளைக் கவி பாடும் பருவத்தை விளக்குகிறது. பிள்ளைக் கவியில் வரும் பத்து பருவங்க ளையும் மூன்று முதல் இருபத்தோரு திங்களில் பாடுவது உண்டு. ஒற்றைப்பட்ட திங்களில் பாடுவது நல்லதென் பர். பாட்டுடைத் தலைவனது குழந்தைப் பருவத்தைக் காப்பு. தாய், செங்கீரை, தாலாட்டு, சப்பாணி, முத்தம், வருகை, சிறுபறை முழக்கல், சிற்றியல் சிதைத்தல், தேர் உருட்டல் எனப் பத்து பருவங்களாகப் பகுத்துக்கொண்டு ஒவ்வொன்றிற்கும் பத்து செய்யுட்களாக ஒன்றித்த மாதங் களில் பாடப் பெறுவதாகும். இது ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும். மேலே சுட்டிய ஆண்பாலுக்குப் பத்துபருவங்களில் இறுதி மூன்றான சிறுபறை, சிற்றில் - சிறுதேர் நீக்கி அவற்றிற் குப்பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல்'ஆகியவற்றை அமைத்துப் பாடுவது பெண்பால் பிள்ளைத் தமிழாகும்.

மனித உறவுகள் பலப்பல. அவற்றுள் மிகப் புனித மானதும், இயல்பாக எழுவதும் குழந்தையிடம் தோன்று கிற அன்புதான். இந்த அன்பையே இறைவனுக்கும் தமக்கும் உள்ள தொடர்பாகக் கொண்டு வாழ்ந்த அடியார்கள் பலர். தெய்வங்களையாவது, பெரியோரை யாவது குழந்தையாகப் பாவித்துக் காப்புப்பாடி, செங் கீரை ஆடவா என அழைத்துத் தாலாட்டுப் பாடித் தூங்க வைப்பர். இந்த பாவனையின் முதிர்ச்சியில் பாட்டுடைத் தணவன், "குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி வருவான்; சப்பாணி கொட்டுவான்; சிறுபறை முழங்குவான்;| சிறு தேர் உருட்டுவான்; இவ்வாறு தோன்றிய இலக்கிய வகையே பிள்ளைத் தமிழாகும், நாளடைவில் பாடவேண் டிய முறை பற்றிய இலக்கணம் பிறந்தது.

**குழைக்காதர் பிள்ளைத் தமிழ் :**

குழைக்காதர் பிள்ளைத் தமிழில் முதல் பருவமாகிய காப்புப் பருவத்தில், நம் புலவர் சரசுவதி துதியுடன் தம் சமய மரபிற்கேற்ப ஆழ்வார்கள் பன்னிருவரையும் காக்கும் தெய்வமாக வைத்துப் பாடியுள்ளார். ஒரு காலை நீட்டி, ஒரு காலை மடக்கி, கைகளைத் தரையில் ஊன்றி, தலை நிமிர்த்தி, முகம் அசையக் குழந்தை ஆடுவது செங்கீரையாட்டம். இதனைச் சிறந்த சொல்லோவியமாக கவிஞர் அமைத்துள்ளார்.

''ஒளிர் பட்டாடையுடன் மகர குண்டலமாட
திருவரையின் மணியசைந்தாட''

ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் மிகவும் இனிமையாக

''செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாளா
செங்கீரை யாடியருளே''

எனப் புலவர் பாடுகிறார். தாலாட்டைக் கேட்பதாக அமைவது தாலப்பருவம். இசைக்கு மயங்காதவர்தான் உண்டோ ! இசையை இரசிக்கத் தெரியாதவன் ஒரு விலங்கு என மேனாட்டு அறிஞர் ஒருவர் கூறுகிறார். அதனினும் குழைக்காதர் தாலாட்டு கேட்போருக்கே துயிலினை வரவழைப்பதாக அமைந்துள்ளது.

'' ................................ மரகதமா
மணியே தாலோ தாலேலோ
மகரக் குழையே யென்னிருகண்
மணியே தாலோ தாலேலோ ! ''

குழந்தை கையோடு கைசேர்த்துத் தான் செய்த அரிய செயலைத் தானே ஆரவாரித்து அனுபவிக்கும் பருவம் சப்பாணிப் பருவம்.

தத்தித் தத்தி தளர் நடையில் குழந்தை நடந்து வருவதைக் கவிதையின் வாயிலாகப் படம் பிடித்துக் காட்டுவது வாரானை என்ற வருகைப் பருவம்.

திருவாயின் முத்தமருளே, கனிவாயின் முத்தமருளே எனக் குழந்தையிடம் முத்தப் பருவத்தில் வேண்டுகிறார்.

வானத்துச் சந்திரனை விளையாட வரும்படி அழைப் பதாக அமைந்துள்ளது அம்புலிப் பருவம்.

" ஆழிநீர் வண்ணனாம் வாழி மாதவனுடன்
அம்புலீ யாடவாவே ! "

சிறுபெண்கள் கட்டி விளையாடும் மணல் வீட்டை

"பொருனைத் தடந்துறைவா
சிறியேந் சிற்றில் சிதையேலே"

எனப் பாடுவது எட்டாவது பருவமாகிய சிற்றில் பருவம். " சிறுபறை கொட்டியருளே, சிறுதேர் உருட்டியருளே " என பிள்ளைத் தமிழ் முற்றுப் பெறுகின்றது.

இந்நூலின் பாட்டுடைத் தலைவனை இராமனாகப் பாவித்து, வில்லை முரித்து, அவள் சீதையினை மணம் புரிந்து இராவணன் முதலிய அரக்கர்களை அழித்த வீரச் செயல்களை நம் புலவர் பாடுகின்றார், பெருமாள் இராம பிரானாகப் புரிந்த செயல்களே இங்கு மிகுதியாகக் காணப் படுகின்றன. இனிய, எளிய சொற்களால், கற்பனை நயம் கலந்து மிகவும் அருமையாக இப்பிரபந்தம் அமைந் துள்ளது. குழைக்காதர் என்று ஆழ்வார் நாயகி அக மகிழ்ந்து சூட்டிய பெயரால் இப்பிரபந்தத்தைப் பாடியவர் தென்திருப்பேரையில் வாழ்த்த ஒரு தமிழ்ப் புலவர் எனத் தெரிய வருகிறது. ஆசிரியர் துதியிலிருந்து கருணையும், கம்பீரமும் வாய்ந்த தோற்றத்தையுடைய இரகுநாத பட்டர் என்ற வைணவர் புலவரின் குரு என்று தெரியவரு கிறது. ஆனால் புவவரின் பெயர், காலம், வாழ்க்கைக் குறிப்பு ஒன்றும் புலனாகவில்லை. நூலின் பலவிடங் களில், "நூற்றெண்மர்" மரபினரைப் புலவர் புகழ்ந்து பாடக் காண்கிறோம். இந்நூலின் முதற் பருவத்தின் முதற் செய்யுளிலே

'நூற்றெண்மர் சிந்தை குடிகொண்டிருக்கும் பாமாலை, எனக் குறிப்பிடுகிறார். நூலினிடையே ' நூற்றெண்ம ரோடு விளையாடுமால் ' எனக் குழந்தை தெய்வத்தினை வேண்டுகிறார். இறுதிச் செய்யுளிலே,

" சீர்பெருகும் வண்மை நூற்றெண்மர் வாழி "

என வாழ்த்துகிறார். பல இடங்களில் 'குலநாத்' எனப் பரவுகிறார். ஏற்கனவே இவ்வூர் மக்கள் குழைக்காதரை கோயிலில் குடிகொண்டிருப்பவர் எனக் கருதாது, தத்தம் வீட்டுக் குழந்தையாக சீராட்டி, பாராட்டுவதுண்டு. மேலும். வாரிசு இல்லாத இவ்வூர்க்காரர்கள் தங்கள் நகையினை இப்பெருமானுக்குசூட்டி மகிழ்வதுண்டு. பிள்ளைத் தமிழ் முழுவதும் புராணக் கதைகள், வரலாற்றுச் செய்திகள் விரவி வருகின்றன.

புலவர் பெயர் தெரியாமலும், இதுவரை அச்சு வாகனம் ஏறாத "குழைக்காதர் பிள்ளைத் தமிழ்" என்ற இந்த எளிய, இனிய சிற்றிலக்கியம் சொல்தோறும் தேனொழுகும்; கற்றோர் காவினை கனியச் செய்யும்; கேட்போர் மனதினைக் கரையச் செய்யும்.

வாழ்க குழைக்காதர் பெருமை
வளர்க குழைக்காதர் இலக்கியம்.

---

# குழைக்காதர் பிள்ளைத் தமிழ்

## நம்மாழ்வார் காப்பு

பூமாது குடி கொண்டு வீற்றிருந் தரசு புரி
பொற்புலவு பாதுமா சனப்
பொழி கருணை யொடு பெருகு ஞான வெள் ளத்தலை
புரட்டு திரு முத்தி ரைக்கைக்
கோமானை யெழுதரிய சதுமறையும் அள்ளிக்
கொழித்து வண் தமிழ் படுத்திக்
கூறுதிரு வாய்மொழி யோர் நாலாயிரஞ் செய்த
குருகை முனி யைப்பர வுதும்
தேமா நறுங்கனித் தேன் மதகி னூடுபாய்
திருவழுதி வளநா டனைத்
தென் திருப் பேரை நகர் காவலனை
நூற்றெண்மர் சிந்தைகுடி கொண்டிருக்கும்
மாமால் வருணன் வந் தடிபரவும்
ஆழிநீர் வண்ணனைப் புயல் வண்ணனை
வானப்பி ரானைநம் குலநாத னைப் புகழும்
வண்தமிழ்ச் சொல்தழை யவே 1

### சரஸ்வதி

அஞ்சிறைய வரிவண் டுழக்கிக் கணைக்
காலசைத்துப் பொலன்தா தளைந் (து)
அடை கிடந் தாலித்து வாய் மடுத் துத்
துதைந் தளிநறவு கூட்டுண்ணமென்
பிஞ்சு மடல் முகை முறுக் கவிழும் வெண்
தாமரைப் பீடத்தி னினிதிருக்கும்
பெடை யோதி மஞ் செஞ்சொல் மடமாது
வெண்ணிறப் பெண்ணினிரு தாள்துதிப்போம்.
பஞ்சனைய பரிபுரத் தளிரடித் துடியிடைப்
பணை முலைக் கனிவாய் மொழிப்
பைந்தொடிச் சீதையை மணம் புணர
மிதிலையம் பதிபுகுந் தாடு ஜனகன்
செஞ் சிலையி றுத்தமாக ரக்குழைக் கடவுளைத்
திருவழுதி வளநா டனைத்
தென் திருப் பேரைநகர் காவலனை
வாழ்த்துமென் செந்தமிழ்ச் சொல்தழை யவே 2

### ஆண்டாள்

மண் மகளு மாய்ப் பின்னை மடமகளு மாய்
மிதிலை வரு ஜனகனுக்கு மகளாய்
மங்கலச் சொல் திருப் பல்லாண்டு
செம்பவள வாய்திறந் தோதி னோன்தன்
பெண்மகளு மாய்வந் தரங்கேசர் முதலைந்து
பேருக்கு மொரு தே வியாய்ப்
பேர்பெற்று மாலைசூ டிக் கொடுத் தருளிய
பிராட்டியை வணங்கல் செய்வாம்
தண் மதியி னகடுதொடு மாடமா ளிகை
நெடிய தமனியப் பொற்குன் றமும்
சதுமறைக் குரிய வேள் வியும்யாக சாலையும்
சந்நிதியில் நூற்றெண் மரும்
கண்மணி யெனத் தகைய பிள்ளைக்கு ழாமுமலி
காவு சூழ் பேரை யூரன்
கருணையொடு வருணன் அடிபரவும் மக ரக்குழைக்
கடவுள் சொல் தழைய வென்றே. 3

## பொய்கையார்

பாரரா வணனெனும் படுபழிக் கஞ்சாத
பாவி கொலை களவு கபடம்
பழகுபா தகன் மௌலி யொடு பதும துகன்படல்
பண்டுகோ தண்டம் வாங்கும்
வீரமே கந்திருக் கோவலூ ரிடைகழியின்
வெளிநிற்ப ஒவ்வொரு வர்மேல்
மிகநெருக் குண்டபுகழ் மூவரில் பொய்கையார்
மென்சரணம் அஞ்சலி செய்வாம்
தாரை வேல் விழிபாய வாலிமார் புருவ ஒரு
சரம் விடுத் துக்கொன் றவன்
தம்பிக்கு மகுடம் கவித்தர சளிக்கின்ற
தாமோ தரக்கு ழகனைப்
பேரையா திபனைநங் குலநாத னைத் துழாய்ப்
பெம்மானை அம்மா னையே
பேசுஞ் செழுந்தமிழ்ப் பிள்ளைக் கவிக் குள்ள
பேதைமை பொறுத் தரு ளவே. 4

## பூதத்தார்

ஆரணப் பொருள் நான்கும் யாகமோரைந்து
நூ லைந்தொடைந் தெட்டு நியமம்
ஆறுதொண் ணூற்றாறு தத்துவம்
சித்தியெட் டைம்புல டைக்கு ஞானக்
காரணச் சுடர்விளக் கொளிகொண்டு யாவுமொரு
கரைகண்டு புகழ் கொண் டசொல்
கருணாகரக் குரிசில் உயர் பூத ஆழ்வார்
கழற்கால் வணங்கல் செய்வாம்
பூரணக் கலைமதியின் நிலவொழுக ஆம்பல் மென்
புரிமுறுக் கவிழ் வாவியம்
புனல் படியும் வன்கரா வதுவந் திழுக்க அப்
பொழு தாதி மூலமென்றே
வாரணப் பகடலறி வீரிடக் காத்தருள் செய்
மையாழி நீர் வண் ணனை
வானப்பி ரானைநங் குலநாத னைப்புகழும்
வண்தமிழ்ச் சொல்தழை யவே. 5

## பேயாழ்வார்

தெளிக்கும் கொழும்பிரசம் ஊற்றிருக் கும்
கலூழி திரை மண்டி மடு நிறையவே
தேக் கெறியும் வெள்ளப் பெருக்கில்
பொலன்தாது சிந்தக் குடைந்து பம்பிக்
களிக்குஞ் சிறைச் சுரும் பிசைமுரல
முகைவிண்ட கடிகமழ் பசுந்தண் துழாய்க்
கடவுள் திரு வந்தாதி புகலு மயிலையர்கோன்
கழற்கால் வணங்கல் செய்வாம்
துளிக்குந் திரைப் பொருநை மதகினொலி யும்
பழஞ் சுருதிமறை யவர்கள் ஒலியும்
சொல்லரிய பிள்ளைக் குழாவொலியும்
மங்கலத் தூயமுர சத்தொடு பரி
மளிக்குந் திருப் பேரை மணி வண்ணனைப்
புயலை மகரக்குழைக் கட வுளை
வானப்பி ரானைநங் குலநாத னைப் புகழும்
வண்தமிழ்ச் சொல் தழை யவே. 6

## திருமழிசை

கொந்தார் பசுந்துளவு பழுது தள் ளிச்செழுங்
குளிர் கறுந் தொடையல் சேர்த்துக்
குலவுமணி முடிமீது கைபுனைந் தாழிமால்
குரைகழ லிணங்கத் திரு
அந்தாதி யொடுதிருச் சந்தநூற் றிருபதையும்
அமுதூறு திருவி ருத்தம்
ஆகச் சொல் மாலையணி யோகப்பி ரான்
மழிசை யாதிபனை யே பரவுதும்
நந்தா வளம் பெற்ற திருவழுதி நாடும்
வளர் நகரமும் உரிய கோமான்
நாரணன் பூலோக காரணன்
அச்சுதா னந்தகோ விந்தன் முற்றும்
வந்தாத ரித்துவரு ணன்பரவும் ஆழிநீர்
வண்ண நிகர் முகில்வண் ணனை
வானப்பிரான் அதிர்வளைக்கை மகரக் குழைய
மாதவன் சொல் தழையவே. 7

## குலசேகரர்

வள்ளவாய் நெகிழத் துளிக்கும் பசுந்தேறல்
மலர்மங்கை திகழ் வஞ்சியும்
வளமை தரு குடநாடும் வான் பொருநையும்
கொல்லிவரையும் உரிமைச் சேரர்கோன்
புள்ளவா வுறு நீல மாலிகை கிடந்த
புயபூதரன் குலசே கரன்
பொருசிலையை நெடிய வடவரை மிசை
பொறித்த வண் புகழ் வேந்த னினிது காக்க,
அள்ளல் வாய்ப் பழனத் தடந்தொறுஞ்
சுரிசங்கம் அகடுளைந் தின்ற முத்தும்
அம்பொற் பசும்பாளை தயைவிழ்க் கும்
கமுகின் அணிமுத்தும் நிலவுங் காலக்
கள்ளரு நறுமலர்க் குமுதம் விரி பேரை
வரு கருணா கரக்குரி சிலைக்
கடவுளைக் குலநாத னைப் புகழ்ந் தேத்துமென்
கவிதையின் சொல்தழை யவே. 8

## பெரியாழ்வார்

விடங்காலும் வாளரா வரசுக்கு
முணர்வரிய மிக்க சங்கத் தமிழினால்
மீனவன் மதிப்ப வரி யாசனமி ருந்தினிது
வென்று மூதூர் மதுரையின்
அடங்காத பரசமய மதமறுத் துக்
கிளியறுத்துவே ழுப்பிட ரிருந்து
ஆழி மாலைக் கண்டு வாழிபா டும்
பெரிய ஆழ்வார் தமைத்து திப்பாம்
தடங்கா வடுக்கக் கிடக்கின்ற கல்லுருத்
தவிர முனி பின்னடந்து
சரண பங் கேருகத்து கலினிக்கும்
பசுந்தண் டுழாய்க் கொண்டல் கேணிக்
கிடங்கா னதிற் பகட் டிளவாளை துள்ள
மைக் கெண்டைவிளை யாடு புனல்சூழ்
கெழுதகைய தென்பேரை வளமலிதருந்தூய
கேசவன் சொல்தழை யவே. 9

## தொண்டரடிப் பொடி

பண்டாலிலை யிற்கண்டுயில் ஞான
பராபரர் காவிரி நீர்
படியு மரங்கர்க்குச் சொல்மாலை
படிந்தடியிற் சூட்டி
வண்டார் துளவத் தொடைமுடி சூடி
வணங்கும் தவராசன்
மண்டங் குடிவாழ் தொண்டரடிப் பொடி
வர முனியைத் தொழுவாம்.
குண்டாரு நதிப்புனல் அனல் குமுறக்
கோதண்டம் வாங்கிக்
குழைய வளைத் தொரு மகழி
கொடுத்தருள் கோமேதக நீலம்
தண்டாமரை மலரும் பேரையில்வரு
தாமோதரர் தூய
தமிழ்தெரி பிள்ளைக் கவி வழுவாதெழு
தரணியில் நிலை பெறவே. 10

## பாணர்

வச்சிரக் குலிசபதி முனிவரிமை யவர்
சது மறைக்கடவுள் மழுவ லாளன்
வந்தடி பணிந்து தொழு மெந்தைக்கு
முத்திதரு வைகுண்ட பதவியானுக்(கு)
அச்சுதப் பச்சை மாலுக்கு அருமறைப் பொருட்
கருமணிக் கண்மலர் படைத்(து)
அமலனாதிப் பொருளுரைக் கின்ற
குரிசில் பாணாழ்வாரையே பரவுதும்
கச்சறப் பொருமிப் புடைத்துச் சினத்துக்
கனத்தடி பரந்து விம்மிக்
கண்கறுத் தமிர்தம் பொதிந்த
குங்கும முலைக் கற்புடைச் சீதையாளை
நச்சி தற்சிலை வளைக்கும் பசுந்தண்டுழாய்
ராமாவதார தீர
நாராயணன் வழுதிநாடன் தங்குலநாதன்
நல்தமிழ்ச் சொல் தழையவே, 11

## திருமங்கையாழ்வார்

சிறியதிரு மடல்பெரிய திருமடல்
திருமொழி செழுந்தமிழ் நெடுந்தாண் டகம்
சிறக்கின்ற சொற்குறுந் தாண்டகம்
விதிமுறை தெளிந்த வெழு கூற்றி ருக்கை
நறிய துள வணியுமுகி லுக்குரைக் கும்
மங்கை நாற்கவிப் பெருமா னைமுன்
நான்மறைப் பொருளுக்கு மெட்டாவரும் பொருளின்
நற்பொருள் கவர்கள்வனைப்
பறிமுதல் திரும்பக் கொடாதனைத்துந்
திருப்பணி செயும் புகழ் வேந்தனைப்
பலகாலும் நெஞ்சில் வைத்தவனடிக் கமலமலர்
பரிவொடு பணிந்தேத் துதும்
உறிமிசையிருந்த அளை களவினால் வாரி
அன்றொருதிவலை சிந்தாதுணும்
உயர்புகழ்ப் பேரைவரு குலநாதன்
முதுகவிதை உலகெங்கணும் தழையவே. 12

## மதுரகவி

முடிக்கும் பசுந்துழாய்ச் சக்ராயுதக் கடவுள்
முளரியங் கண்ணனுக்கு
முதுமறை தெரிந்துதிரு வந்தாதி யாசிரியம்
முறைவழா வடிதொறுஞ் சொல்
வடிக்குஞ் செழுந்தமிழ்ப் பாடலாயிரமும்
மகிழ் மாறனுரை செய்தரு ளவே
வரிசை யொரு பட்டோலை எழுது மொரு
மதுரகவி வரமுனி வனைப்பர வுதுங்
குடிக்குந் தடந்திரைப் புனல்யாவு மொரு
முகங் கொண்டு வரு னன்படி யவே
கூடு பொருனைத்துறைச் குலநாத னுயர்மாட
கூடங்க டோறும் நெடுவான்
இடிக்குங் கருங்கொண்டல் கண்படுக் கும்பேரை
எம்பிரான் வானப் பிரான்
இருசரணமலர் சூடுமெனது கன
கவிதை உலகெங்கணுந் தழைய வென்றே. 13

## எம் பெருமானார்

முதியகவி நாவலர் தம்பிரான் திருஞான
முத்திரைக் கடவுள் திருவாய்
மொழிதனக் குரைவிரித் தெழுது
பிரவுடவாக்கி முழுதுமன் யர்க்கு வாழ்வு
புது நறவு கக்கித் துளிக்குஞ் சரோருகப்
பொற்கழற் கருணா கரன்
புகலரிய பரசமய திமிராரி வண்
புகழ்ப் பூதூர னைப்பர வுதும்
சது மறையு மறிவரிய குலநாதன்
முத்தொடலை தத்தும் தடம் பொருநையின்
தருமநெறித் தவறாத் திருவழுதி வளநாடு
தழையவரு கருணை மேகம்
விதிமுறையி னொடு தொழுது வருணன்
ஆ ராதனை செய் விமலன் மக ரக் குழை யமான்
விரவுஞ் செழுந்தமிழ்ப் பிள்ளைக் கவிக்குள்ள
மிக்கசொல் தழைய வென்றே. 14

---

காப்பு முற்றும்.

## செங்கீரைப் பருவம்

வானாடரும்பொற் பொகுட்டா சனப்
பதும மண்டபத் தரசி ருக்கும்
மறைக் கிழவ னும் சடை முடிக்கட வுளும்
குலிச வச்சிரா யுதத்த லைவனும்
பூ நாறு வெட்சியந் தெரியல் புனை குமரனும்
புகர் முகத் தவனு மதியும்
பொங்கு சுடரிரவியுந் துங்கமுனி வரும் நெடும்
பொற் கோயில் வலம் வந்து நம்
கோனாக வருண னாராதனை செய் மஞ்சனக்
கொலுவில் வந்தடி வணங்கிக்
கும்பிட்டு நின்று சே விப்ப நற் சேவைபுரி
கோசலைக் கிரு கண்மணியே
தேனாறு பச்சைப் பசுந்துழாய் மேகமே
செங்கீரை யாடி யருளே
செல்லத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரையாடியருளே! 1

முருகொழுகு பங்கயத் தடமு நீள் குளனும் அனை
மோதும் புனற் சுழியினும்
முதிராத விளமணலும் நடைவரம்பும் செய்ய
முதுகுரம்பும் கரும்பும்
அருகு நெட்டிலை முடத்தாழை நிழலும் வேலி
அடரும் செழுஞ் சோலையும்
அம்பொற் பசும்பாளை தளையவிழ்க்கும் கமுகின்
அணி வனமுமதகி னூடும்
சொருகு குழல் மகளிர் குடமுலை யசைய நுணுகிடைச்
சுமக்கின்ற பொற்குடத்தும்
சுடர்மணிப் பொற்றடந் தேரோடும் வீதியும்
சுரிமுகச் சங்க மூரும்
திருவழுதி நாடாள பரமபத வீடான
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே. 2

ஒறுகால் வரிச் சுரும் படைகிடக் கும்
குழ லரக்கி மண் டோத ரிகழுத்
தழகு தா லிச்சரடு தரையில் வீ ழப்
பருந் தாய் வெங்கழுகு மொய்ப்ப
மறுகால் நெடுஞ்சிகர மாடமா ளிகையிடிய
வலதுகட் கடைதுடிப்ப
வாசல்தொறு நெய்தலம் பறைகொட்ட
லங்கை யழல் மண்டி வான் முகடு தாவக்
குறுகாத வல்லசுரர் செவியடைப் பக்
கொழுங் குருதி வாய் கொப்பளிப்பக்
கொடிய ராவணன் மகுடமுடி சிதற வரிசிலை
குழைத்து வெஞ் சமர்மு கத்துச்
சிறு நாணொலிக் கொண்டு விளையாடு மேகமே
செங்கீரை யாடி யருளே
செல்வத் திருப் பேரைவல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே. 3

இருகுழையு மணிகுதம்பையு மாட
வெயில் விரிந் திலகு குறு முறுவ லாட
இணைதிருக் கையிலணி வளையாட மென்சுரும்பு
இசைமயில் துளவ மாடப்
பொருவுமிரு சிலை நுதலில் வேர்வாட வே
பொங்கு புழுதி திரு மேனி யாடப்
புழுகொழுகு கரிய குழல் சரிய வரைவடமு நூ
புரமுந் தயங்கியாட
முருகுவிரி தருநறுங் கமல மதிமுக விட்டம்
முழுநிலா வீசியாட
முதிய வா னவர் முனிவ ரமரர் கோன் வாலையவள்
முறை யெடுங் காண வந்தார்
திருவரையின் மணியசைந் தாடக் குழைந்தினிது
செங்கீரை யாடி யருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே. 4

சந்தன கதம்பப் படீரகுங் குமமுலைத்
தையல் மர கதவல் லிசெஞ்
சடிலேசர் வாமத் திருப்ப நான்பறைபரவு
சது முகப் பிரமன் நாவில்
இந்து நுதல் வாணி சந்தத மிருப் பப் பணிந்
திருசரணமலர் சூடுவோர்
இதயதாமரை மலரு நூற்றெண்மர் சித்தையினும்
இசைபாடி வண்டுக் கிண்டக்
கொந்தவிழ் நறுங்கமல மலராசனக் கோயில்
குடியிருக்கும் பரிமளக்
கோமளக் கொடிவல்லி மாமதுர வாயாள்
குழைக்காத நாயகியெனும்
சிந்துரப் பிடியொடும் விளையாடு மேகமே
செங்கீரை யாடி யருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே. 5

ஒள்ளொளி விரிந்த சிறு கிண்கிணியு நூபுரமும்
உபய சரணத்திலாட
ஒளிர்மணிப் பட்டாடையாட அரைவடமாட
உச்சியின் மிலைச்சு பரிதி
நள்ளிடை வயங்கு பொற்சூழியத் தொகையாட
நகுநிலா முறுவலாட
நவமணிச் சுட்டியொடு கட்டு பொற்பட்டமும்
நன்னுதற் பொட்டுமாடத்
துள்ளியெறி திரைமகர ஜலராசி படுசெழுந்
துய்ய செம்பவள மேனி
தொய்யக் குழைந்தாடு பண்டியுந் தொந்தியும்
துணை நெடுங் குழையுமாடத்
தென்ளமுத மணிவாயினுள் ளொழுகி வழியவே
செங்கீரையாடியருளே
செல்வத்திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரையாடி யருளே 6

நிரையும் பசும் பொனணி மாடகூ டமும் மேடை
நிழன் மணிச் சாளரத்தும்
நெடுநிலா முற்றத்தும் வாவிதொறு நீராடி
நிறை நறுந் தாது பூசி
வருமந்த மாருதத் திளைய மென்காலசைய
மாவிளங் குயில்கள் கூவ
மயிலாட அளிபாட வேனில் வேளரசு புரி
வழுதி வளநாடு தழைய
விரையும் தடம் புனல் பெருக்காறெடுத் தோட
எழில் மயில் தழைப் பீலியும்
இணையிலா மணியாரமும் யானை வெண் கோடும்
எற்றி யெற்றிச் சுருட்டித்
திரைவந்து கரைமோது பொருநையந் தண்துறைவ
செங்கீரையாடி யருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே, 7

எத்திக்கும் வண்புகழ் தழைத்த திருவாய்ப்பாடி
இடையர்தங் குடில்கள் தோறும்
இருகயிற் றுறியடுக் கியமணிக் கலசத்
திருக்கும் தயிர்க் கட்டிகண்
டொத்திக்கை யிட்டுரல் மிதித்தேறி யடிகுந்தி
யொரு திவலை சிந்தாமலே
ஒண்பவள வாய் மருந்துண்டிருங் கள்வனென்
றுரலோடு கட்டியவர் கை
மத்திட்டடிப்ப விருகண் பிசைந்தழு தரையன்
மணிபொத்தியாடி மறுகால்
வாயூறியச் சுவை கனிந்தாய்ச்சிய ரடைபட
வற்றக் கறந்து காய்ச்சும்
தித்தித்த பாலுக்கு மிச்சித்து நின்றவா
செங்கீரையாடி யருளே.
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே. 8

தாதவிழ் பசுந்துளவ மாலையாடச் சிறிய
தமனியச் சுட்டியாடத்
தருண மரகத வயிர வலையமாடப் பொற்
றடந் திருத் தோள்களாடக்
காதுதிரு மணிமகரக் குண்டலமுமாடக்
கவின்பொலியு மேனியாடக்
கதிர்முத்து வடமாட மதுரித்த செந்தமிழ்
கற்றவர்கள் கொண்டாடவே
வாதுபுரி கொடிய சேனாபதி யிராவணன்
மனவலிகள் திண்டாட நீள்
வானத்திருந்து துந்துபியாட மலர்மாரி
வானர் பொழிந்தாடவோர்
சீதர முகுந்த பேராயிர முகந்தவர்
செங்கீரை யாடி யருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடி யருளே. 9

அலைவலைக்குங் கருங்கடலும் வரன் முகடு தொடும்
அம்பொற் கொடிக் குழா மொய்த்து
ஆதவன் பொற்றடந்தேர் தடுக்குஞ் செம்பொன்
அணிமாட கூடங்களும்
நிலை வளைக்கும் பகழிலங்காபுரத் திறைவ
னெடிய ராவணன் மகுடமும்
நீலிதாடகை மார்பும் மாரீசனும் பார
நிஷ்டூரவதி காயனும்
கொலை வளைக்கும் கும்பகர்ணனும் நிகும்பனும்
குறுகாத வல்லசுரரும்
கொடிய வாலியு மரமொரே முருவக்
குழைத்து வடிவாளி தொடவெம்
சிலைவளைக்கும் திருக்கைத் தாமரைக் கொண்டல்
செங்கீரை யாடி யருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரையாடி யருளே! 10

முற்றும்.

---

## தாலப் பருவம்

கயங் கொண்டலம்பித் திரையெறியுங்
கடல் சூழுலக முழுவதும் வெண்
கவிகை நிழற்கீழினி தடக்கிக்
கருணை புரிந்து நாடொறு நின்
றியங்குஞ் சரங்களனைத்தையு மற்றெல்லா
உயிருந் தன்னுயிர் போல்
இரங்கிக் காக்குமரசர் பிரான்
எங்கோன் தசரதப் பெருமான்
முயங்கும் பிராட்டிமார் மூவரவர்க்குள்
முதன்மைத் தலைவி யெனும்
முற்றா முலைக் கோசலை வயிற்றில்
முளைத்து மடிமேற்கிடந்து தனி
வயங்குங் கிரண மரகத மாமணியே
தாலோ தாலேலோ
மகரக் குழையே யென்னிருகண்மணியே
தாலோ தாலேலோ.

பண்ணார் மதுரம் பழுத்தொழுகிப்
பாகூற்றிருந்து கனிந்த மொழிப்
பவளத் திருவாய் மணிமுறுவல்
பங்கேருகக் குங்குமச் சுவட்டுப்
பெண்ணார முதத் திருமடந்தை
பிரியா மருமத் தினிதிருக்கும்
பேராயிரம் பெற்றுடைய திருப்
பேரைப் பிரானே முறுக்கவிழ்பூந்
தண்ணார் துளவப் புயசயில
தாமோதர சீதர முகுந்தா
தமரக் கடலிற் புனல் முகந்து
தழைக்குங் கயஞ்சூற் கார்மேக
வண்ணா உலகன்றளந்த நெடுமானே
தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர் வாழ்வே
தரலோ தாலேலோ 2

முளைக்குந் தவளக் கற்றை நிலா
முழுவெண் திங்கள் திருவதன
முற்றா முலைக் கோட்டர மகளிர்
முதுபேராயத்தவர் மருங்குற் (கு)
இளைக்குங் கொடிபோற் கொலி நுடங்க
எழில் மாமணிச் சூளிகை முகட்டின்
இணைக்கும பசிய மரகதங் கான்
றெறிக்குங் கிரணக் கொழுந்தோடிக்
கிளைக்குந் துணர்க் கற்பகச் சோலைக்
கிடையே தழைய வாகாச
கெங்கைக் கரையில் பசும்புல்லெனக்
கிட்டிச் சுரபி மணிநாவால்
வளைக்கும் பசும் பொற்றலங்கள் மலி
வளஞ்சேர் நாடா தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர் வாழ்வே
தாலோ தாலே லோ. 3

இடிக்குங் கடுஞ்சொற் கொடும் பாவி
இழைக்குந் தறுகட் கஞ்சன் விடுத்
திடுகோக்களிற்றின் புகர் முகத்திலேந்தும்
பிறைக் கிம்புரி மருப்பை
ஒடிக்குந் தடக்கைச் செழும்புயலே
உணர்வுக் குணர்வே என்னுயிரே
ஒழியாப் பிறவிக் கடல் சுவற்றி
உயர் வீடளிக்கும் பெருமானே
முடிக்கும் பசுந்தண் துழாய் மாலை
முடிக்கும் குழகா வானவர்கும்
முதுநான் மறைக்கும் எட்டாத
மூலப் பொருளே பாகுபெற
வடிக்குந் தமிழ்த் தெதிருப்பேரை மாலே
தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ 4

கருதுஞ் சமய மோராறுங்
கணிக்கும் பொருளே யுவட்டெறியும்
கருணைக்கடலே செழுங்கமலக்
கண்ணா கண்ணினுண் மணியே
திருகுஞ் சினவானவுணர் படச் சிலை
கால் வளைத்துப் போர்முகத்துச்
செல்லும் புயலே உறியில் வெண்ணெய்
திருடும் குழகா பேய் முலைப்பால்
பருகும் பவளக் கனிவாயா
பசுந்தார்த் துளவம் அணிமுகுந்தா
பங்கேருகச் செஞ்சரண நெடும்
படப்பாந்தவின் மேல் நடித் திரட்டை
மருதந் தவழ்ந்து சகடுதைத்த மாலே
தாலோ தாலேலோ
மகரக் குழையே யென்னிரு கண்மணியே
தாலோ தாலே லோ. 5

சொல்லற் கரிய கிரண நெடுஞ்
சுடராழியினாற் கதிர் மறைத்த
சுருதிப் பொருளே குருகூரன்
சொற்பா அமிர்தங் கனிந்த செவிச்
செல்வக் குழகா பாட்டாய்ந்து
சிறைவண்டலம்பிக் கண்படுக்கும்
செழுந்தார்த்துளவு மணங் கமழும்
சிகரப்புய பூதர முகுந்தா
அல்லிக் கமலப் பொகுட்டு மட
அனஞ்சேர் வழுதித் திருநாடா
அடிவைத்தொரு மூவுலகமும்
அன்றளக்கும் புயலே சேறுடைக்கும்
மல்லர் பழனத் திருப்பேரை
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ

இடையிற் றொடியக் கனத் தடிக்கொண்
டிளகித் ததும்பிப்பணைத் திருமாய்
தேந்து களபப் புளக முலையில்வத்
துவர் வாயம்புயப் பொற்
பெடையைத் தழுவியனு தினமும்
பிரியா திருக்கும் திருமார்பா
பெருவா ரிதி சூழ் நிலவலயம்
பெண்ணுக் கிணங்கும் புயசயிலா
படையிற் சுமந்த கொழு நுழைந்த
பழனக் கொஞ் சேற்றினில் வரம்பில்
பாகுபாடு நெட்டிலைக் கரும்பில்
பசும் பூங்காவில் மணலினில் வாய்
மடையிற் பணிலந் தவழ் பேரை
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ

அடியார் பிறவிக் கடல் சுவற்றி
அழியாப் பரமபதங் கொடுக்கும்
ஆழிப் புயுலே பணா மகுடத்
தடல் வாளரவின் கண்பிதுங்சு
நடியா நிற்கு மொரு குழகா
நாராயண சீதா முகுந்தா
நண்ணும் புலவன் கனி கணன்பின்
நற்பாய் சுருட்டிச் சொல் தமிழ்க்கும்
படிமேல் நடக்கு மிருசாண்
பங்கேருக அன்றனல் கொளுந்தப்
பரவைக் கொருகாய் கணை தொடுத்த
பாரப்புய பூதரத் திலங்கும்
வடிவார் திகிரிப் படை சுமந்த
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ 8

கருணை பெருகி யுவட்டெறியக்
கற்றா நினாயின் பின் நடந்து
கானந் தழைப்பத் துணைக் கமலக்
கழற்கால் பின்னிக் கன்றொடுகுன்(று)
உருகும்படி வேய்ங்குழல் வாய்வைத்(து)
ஊதும் புயலே அடியவர்தம
ஒழியாய் பிறவித் துயரகற்றி
உள்ளத் திருக்கும் திருக்கறுத்து
நிருதர் குலமும் வேரறுத்த நிமலா
சமராடி டுந்திகிரி
நீலக் குழகா மணநாற
நிரைக்கும் பசுந்தண் துழாய் முகுந்தா
வருணன் புரவும் இருசரண
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ 9

விட வாளரவக் கயிறு
வெற்பிற் பிணித்து விசித்திறுக்க
விரிதெண் திரை நீர்க்கடல் முகட்டின்
விண்ணோர் அமுதங்கடைந்த அந்நாள்
அடருங் கிரணக் கௌத்துவமும்
அருமைத் திருவும் தடமார்புக்(கு)
அமைத்துத் திருப் பாலாழி யினும்
அரங்கத்தினுங் கண்துயில் பெரும
குடவால் வளை சூலுளைந்து செத்தேன்
கொழிக்கும் பொலன் தாமரைப்பொகுட்டில்
குளிர் முத்துயிர்ப்ப, கருவென்னக்
கொணர்ந்தஞ் சிறைய விளம்பேட்டு
மடநாரைகள் கூண்டடை செறிக்கும
வளஞ்சேர் நாடா தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ
முற்றும்.

---

## சப்பாணிப் பருவம்

அரமகளிர் தங்கழுத்தணியுநாணகலாமல்
ஐந்தருவடிக் கொடாமல்
அயிராவதப் பெரும் பகடொளித்தோடி
நீளலை கடல் புக்கிடாமல்
திரளவடிகொண்ட தெள்ளமுதமது கொள்ளை போய்த்
தேவர்கள் நடுக்குறாமல்
தேவேந்திரற் கரசு மகுடபங்கம் வந்து
சிறை சாரவுட்புகாமல்
கரதூடணன் திரிசிரர நிகும்பன் கும்ப
கன்னனிந்திர செயித்து
கலங்காத ராவணன் மடிய லங்காபுரங்
கனல் கொளுந்ததப் பெருவிரல்
சரடு பூட்டிச் சிலைக் கடை குழைக்கும் கொண்டல்
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலை செறி தென்திருப் பேரை முகில்
சப்பாணி கொட்டியருளே. 1

அமரர் கின்னரர் முனிவர் கிம்புருடரும் பரவும்
அயிராவதப் பாகனும்
அம் த்திடையுலவு கங்கைப் பெரும்பாவை
அலை யெறிய விட்ட சடிலத்து
உமையையொரு பங்குடைக் கடவுளுந் தொழுது
உளமுவப்ப அமராரு சுடர்வேல்
ஊறுபடு நயனப் படீர குங்கும முலைக்கு
ஒல்குமொரு நுண் மருங்குல்
குமுதவாய் மடமங்கை தேவகிக்குள்ளம்
குழைந்து கண்களி கூரவே
கோசலைக் கினிய கைக்கோமளக் குழவியே
கோதிலா மழைவள்ளலே
தமரவரி வண்டடை கிடந்த முளரிக் கைகொடு
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலை செறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே 2

வேதங்களோடைந்து பூதங்களும் அயன்
விதிக்கின்ற பல்லுயிர்களும்
மிக்கவைம் பொறிகளும் எட்டெழுத்தும்
நின்று விளையாடுமொரு குழவியே
எதங்களைந் தடியரிருவினை தடிந்து
பேரின்பத்திருத்து மொளியே
இலகு சுடர்வேல் விழி துரோபதை தனைச்
சிறிதும் எண்ணாது துகிலுரிதரும்
போதந்த வேளை வந்துதவு சீதர துழாய்ப்
பூதரப்புய முகுந்தா
பொருவரிய வண்டகோளகை முகடுகிறியப்
பொன்னுலகு மேவுபாரி
சாதங் கொணர்ந்தருள் பின்னைக் களித்தவன்
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரை முகில்
சப்பாணி கொட்டியருளே. 3

அடங்காத எழுபது வெள்ளஞ் சேனையுங்கை
அமைக்கும் படைத்தலைவன்
அநுமன் முதலாய் சுக்கிரீவனுஞ் சென்று கடல்
அணைகட்டி லங்காபுரம்
தொடர்ந்தேறியொரு சிலைக் கடை குழைத்தருகணை
துரந்திராவணன் மகுடமும்
துகள் படுத்திச் சனகி சிறைமீட்டதண்ணத்
துழாய்க் காள மேகங் கொடு
விடந்தாவு பஃறலைக் கட்செவி கிடந்தாட
விரிதிரைக் கங்கையாட
வேணியாடக் காளி தன்னுடன் வாதாடு
வெள்ளிப் பொருப்பினன் பால்
தடந்தாரு வேரொடு புரந்தான் கொணர்ந்தமான்
சப்பாணி கொட்டியருளே
சுந்தனச் சோலை செறி தென்திருப் பேரை முகில்
சப்பாணி கொட்டியருளே. 4

மண்டுதிரை யெறி மகர சல ராசி யேழு
நெடுவரை யேழும் அகில மேழும்
வானகமும் உயர்திசையும் வயிறு தங்கப்பவள
வாய் மடுத்தங் காந்து முன்
உண்டுமிழு நீனிறக் குழவி நெடுவாலி மார்(பு)
உருவ வொரு சரம் விடுக்கும்
ஒண்திறற் செங்கை தடங்குரிசில் வேதாந்த
உபநிஷத் ஞானதீபம்
புண்டரிக மலர்முகை முறுக்கவிழு மோடையிற்
புக் கிடங்கர்க்கு வெருவிப்
போரானை மூலமென்றோதா முன்னோடியொரு
புள்ளரசுமீது வருபைந்
தண்டுழாய் புனை கொண்டலண்டர் நாயகனினிது
சப்பரணி கொட்டியருளே.
சந்தனச் சோலை செறி தென்திருப்பேரை முகில்
சப்பாணி கொட்டியருளே. 5

வண்ணந் தழைந்த கடலுலக முழுதும்
பரதன் மணிமுடி கவிப்ப நீ வெவ்
வன மேகெனுஞ் சிறியதாய் சொல் தலைக்கொண்டு
மணி நெடுஞ் சீரை சுற்றிப்
பெண்ணென்ற சீதையொடு மிளையவன் தன்னொடும்
பெருங்கானகத்தில் புகும்
பெம்மான் நறுந்துளவ மாலிகாபரணன் முது
பேரின்ப வீடளிக்கும்
கண்ணன் சிலைக்கடை குழைத்திலங்காபுரங்
கட்டழிக்கும் தேவர் கோன்
சுருணைப் பெருக்காறு வட்டெடுத் தலைமண்டு
காள மேகந் துளி படும்
தண்ணந் தடந்திரைப் பொருநையாம்
தண்துறைவ சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலை செறி தென்திருப்பேரை குயில்
சப்பாணி கொட்டியருளே, 6

உடுக்குந்திரைக் கருங்கடலாடை நிலவலயம்
உதரத் தினுள்ளடக்கி
ஒருசிறிய குறளுரு வமைந்த நெடுநேமிமரல்
உபய சரணார விந்தத்(து)
எடுக்கும் பனிக்குறுந் திவலைபடு மலரிட்
டிறைஞ்சி வருணன் பரவுவோன்
இசைபாடி ஒருகோடி அறுகாய்நுதைந்தாடும்
ஈர்ந்து ழாய்ப்படலை மாயன்
மடுக்குங் கொழுஞ்சுடர்ப்பருதி வானவனுதய
வரை பசும்புரவி பூட்டி
வருமணிப் பொற்றடந் தேர்க்கிடுஞ் சித்திர
வட்டாழி யொட்டி முட்டித்
தடுக்கும் பொல புரிசை சூழ் வழுதி நாடனொரு
சப்பாணி கொட்டி யருளே,
சந்தனச் சோலை செறி தென்திருப்பேரை முகில்
சப்பாணி கொட்டி யருளே. 7

மான வேலரசர்தொழு மிதிலரபுரிச் சனகன்
மாதேவி மணி முன்கைமேல்
வைத்து முத்தாடும் பசுங்கிளி யெனத்தூய
மஞ்சனஞ் செய்து செம்பொன்
மேனி முழுவது நலங்கிடுசெய்து கொங்கைக்கு
மென்களப மள்ளி யப்பி
விரைநறுந்தார் குழலின் மீதணிந் தஞ்சனம்
விளங்கு கட்டையி னெழுதிக்
கூனிளம்பிறை நுதல் கஸ்தூரி தீட்டிநற்
குளிர்மணிச் சுடிகை நாற்றிக்
கோல்வளை திருத்தி மணிமேகலை மருங்கினிற்
கொய்து கொய்தினிது டுக்கும்
சானகி பெருங்காம வெள்ளந் திளைத்தவன்
சப்பாணி கொட்டி யருளே
சந்தனச் சோலை செறி தென்திருப்பேரை முகில்
சப்பாணி கொட்டி யருளே, 8

கக்கக் கொழுங் குருதி நரிபிடுங்கத்தசை
கவர்ந்துயிர் குடிப்ப மறவி
கருநிறத் தாடகையை வதை படுத்தசிலைக்
கடை குழைத்தடிகணை தொடுந்
தொக்கிற் பெருந்தவக் கௌசிகன் வேள்வியும்
சுருதிநூல் முறை முடித்துச்
சொல்லரிய முதிலாபுரிச் சனகன்வில்
கண்டதுண்டப் படுத்து மெங்கோன்
செக்கச் சிவக்குங் கொழும்பவள வார்க்கதிர்ச்
செஞ்சுடாவி மணிமுடிச்
சிவசங்கரக் கடவுள் கண்கள்களி கூரச்
சிறந்தருள் புரிந்து சங்கு
சக்கரத்துணை செங்கை யொக்கச் சிவப்பவொரு
சப்பாணி கொட்டி யருளே,
சந்தனச் சோலைசெறி தென்திருப்பேரை முகில்
சப்பாணி கொட்டி யருளே. 9

பட நடுங்கக்கண்பிதுங்கப் பணாமுடிப்
பஃறலைக்கட் செவியின் மேல்
பபுரி முறுகித்திருகி நடனஞ்செயும் சரண
பங்கேருகக் குழகன் வெவ்
விடரகற்றிச் செனன வலையறுத்துத்
தொடரீரேறி வீடு குடிபுக்கு
எக்காலமும் அரசிருப்பக் கடைக்கண்ணோக்
கின்னருள் புரிந்த நெடுமால்
மடமயிற் சாயற் பசுங்கிள்ளை யங்குதலை
மணிவல்லி தூயவல்லி
வளந்திருப் பேரை வல்லி குங்கும
மிருகமத சந்தனப் பாளிதத்
தடமுலைச் சுவடுபொருது பூதமணி மார்பனொரு
சப்பாணி கொட்டி யருளே,
சந்தனச் சோலைசெறி தென்திருப்பேரை முகில்
சப்பாணி கொட்டி யருளே. 10

முற்றும்.

---

## முத்தப் பருவம்

சொற்ற நான்மறை புக்கிருக்கு மிடமாதலால்
சுரிசங்கு இடம் புரிதலால்
துய்ய மலர் மாளிகைச் செல்வி பேரமுதந்
துளிக்குமென் றின்புறுதலால்
மற்றுலகின் வாழ்பல்லுயிர்க் கிரங்குந்
சத்யவாய்மை குடிகொண்டுறைதலால்
மங்கலப் புனிதமாம் சகலமுந் திருவுள
மகிழ்ந்திரங்கிச் சிறிது நீ
முற்றுமதி யோடர வதுகெழுக் கம்பூவும்
மொய்க்கும் செழுங் கொன்றையும்
மூரித் திரைப்பாய் சுருட்டித்தருங் கய்கை
முதுநீரும் வரவு சோதிக்
கற்றைவார் சடைமுடிச் சிவனு மயனுந்தொழக்
கனி வாயின் முத்தமருளே
காவுசூழ் தென்பேரை ஆழிநீர் வண்ணநின்
கனி வாயின் முத்தமருளே. 1

தழைமடற் பச்சைப்பசும் பூகமணி மிடறு
    தளையவிழ்க்கும் பாளை வாய்த்
தருமுத்தமும் பச்செணக் கிரண மடருமுது
    தாற்றிளங் கதலி வாழை
உழைமுத்து முடலிழுக் குண்டுநியு மென்கரும்பு
    ஒளிர் முத்துமாலை வாயிட்டு
உடனெருக்கும் பொழுது கணுவினில் வெடித்
    துதிரும் உம்பர் வான்முகடுதூங்கும்
மழை முத்தமுந் துளிபடும் பொழுது
    செவ்வுக்கு வாராது வடிவுதகரும்
வளர் புண்டரீகப் பொருட்டு முத்தஞ்சிறைய
    வண்டு கால்கொடு துவைக்கும்
கழை முத்தமுங்கதிர் வெதுப்புண்டு நீறுமொடு
    கதிர் முத்து நிகரல்லவே
காவுசூழ் தென்பேரை ஆழிநீர் வண்ணநின்
    கனிவாயின் முத்தமருளே. 2

முனியுமிள வலும்முடன் வரத்தன் திருந்தாளின்
    முளரித் துகட்க ருங்கல்
முனியிட்ட சாபந் தவிர்த்து முன்னுருவெய்த
    முது கருணை யோடளித்துச்
சனகன் மிதி லாபுரிச் சிலைவளைத் துச்சீதை
    தனைமணம் புணர் தண்டுழாய்ச்
சக்ராயுதக் கடவுள் குலநாதன் முத்
    தத்தும் தடம் பொருநையான்
இனிய சதுமாமறைக கொகுமுதல்வன் வருணன்வந்து
    எக் காலமும் பரவுவோன்
இலகுகொடி மணிமாட வழுதிவள நாடன்
    நூற்றெண் மரொடும் விளையாடுமால்
கனியும் முதும்பாகு மூறிக் கலந்தசொற்
    கனி வாயின் முத்தமருளே,
காவுசூழ் தென்பேரை ஆழிநீர் வண்ணநின்
    கனி வாயின் முத்தமருளே. 3

பொருதிரை சுருட்டுமணி மகரசல ராசிதரு
புது முத்தமுங் கைதொடேம்
புலவு நாறிச்சுற வெறிந்துடல முவரிப்
ரினற் பங்க மூடெழுதலால்
பருக மதுரித்தபா கூற்றிருந் தொழுகும்
பசும் கரும்பீன்ற முத்தும்
பலமொழிக் கவடு படுமாதலால தனையும்
படுபழி யறிந்து வேண்டேம்
இருநிலத்துச் சிவத்துக் கண்டமும்
கறுப்பென்று வேய்முத்தம் தொடேம்
இனிமேலு நினது கனிவாய் முத்தினுக்
குவமை யேதெடுத்துக் கூறுவேன்
கருதுமுது நான்மறைக்கொரு முதல்வனே செழுங்
கனி வாயின் முத்தமருளே
காவுசூழ் தென்பேரை ஆழிநீர் வண்ணநின்
கனி வரயின் முத்தமருளே. 4

உலைவளைக்குங் கொழுங்களல் வாய்த்துருத்தி வைத்து
ஊத வெம்பொறிசிந்த வெந்து
உருகுங் கருங்கல்லுருக் கோடிரும்பு னாழ்து
ஒன்றா யடித்து நீட்டித்
தலை மடுத்ததை முனைபடுத்திக் குணக்கறத்
தட்டியர மிட்டராவிச்
சமைந்தொப்ப மிட்டுக் கடைந்தவடிவேல் பொரு
தடங்கட் செழுங் குமுதவாய்
மலை வளைக்குஞ் செழுங்களப குங்குமமுலை
மடந்தை தெய்வீக போக
மடமயிற் சீதைப் பிராட்டியை
மணம்புணர வளமருவு மிதிலாபுரிச்
சிலை வளைக்கும் பசுந்தண் துழாய் மேகமே
திரு வாயின் முத்தமருளே
தென்திருப் பேரை வருநங் குழைக்காதநின்
திருவாயின் முத்தமருளே. 5

பம்புதிரை வாரிதி வடிவம்பலத்துளி
படுங்ககன முகடு கோத்துப்
பரக்கும் படிக்கும் முன்பெய்தகன் மாறியிற்
பதறியா நிரை கெடாமல்
தம்ப மற்றிடையர் மடியா தேழுநாளாமுது
தடவரை யெடுத் தேந்துமென்
தாமரைச் செங்கை தடங் குரிசிலே
சங்கு சக்ராயுதக் கடவுளே
கம்ப மதமால்யானை மூலமென் றோதஒரு
கருடன் பிடர்த் தலைவரும்
காராழி மணிவண்ண பேராயிரம் பெற்ற
கருணாகரக் குரிசிலே
செம்பவளமுங் குமுதமுங் கவிருமொத்தநின்
திருவாயின் முத்தமருளே
தென் திருப்பேரை வருகங் குழைக்காதநின்
திருவாயின் முத்தமருளே. 6

பொங்கு வெண்டிங்களங் கவிகை வருமிரணியன்
புகல வவன்
புகலாம லெந்தை நாராயணன் தன்பெயர்
புகன்ற திலெழுந்து கோபித்து
அங்கை மலர்மீது சங்காழி யேந்தியும்
அயனுமவிர் சடைப் பெருமானுமுன்
அஞ்சிப் பதுங்கித் திரிந்தனர் மறந்தனைகொல்
அரி யெங்கெனப் புடைப்பப்
பங்கமுறும் அக்கனகன் மார்பம் பிளந்திழி
பசுங்குடர் பிடுங்கி ரத்த
பானம் பணித்தடந்தோள் மாலை சூடவே
பண்டுகளி கொண்டோர் தூணில்
சிங்கவடிவாய் வந்த எங்கள் குலநாதநின்
திருவாயின் முத்தமருளே,
தென் திருப்பேரை வரு நங்குழைக்காதநின்
திருவாயின் முத்தமருளே,

மூவா முதலா யுலகமொரு
    மூன்றும் பரவ அங்குரித்து
முந்திக் கொரு வித்தாக வந்த
    முதுநான் மறையின் குலக்கொழுந்தே
கோவா மொளரு மரகதமே
    கொடும் போரரக்கர் குலக்கூற்றே
கோவா தேதிய ருளக்கமலங்
    குடிபுக் கிருக்கும் பெருமானே
தாவா வளமைக் கோசலைக்கோர்
    தவமே தவத்தின் பயனே யச்
சனகன் தரு சானகி வேட்ட
    தடங்கை களிறே போரேறே
தேவாவமிர்தம் கனி பவளத் திருவாய்
    முத்தம் தருகவே
தெள்ளிப் பயிலும் தமிழ்ப்பேரைச் செல்வா
    முத்தம் தருகவே. 8

துளிங்குந் திரைப் பாற்கடல் முகட்டுத்
    தூய தரங்கத் தனந்தபுரத்
துறைவாய் விரிகண் துயில் கூருஞ்
    சோதிச் சுடரே பேரின்பம்
அளிக்குங் கருணைக் கருங்கடலே
    அழியா வீட்டுக் கொருவிளக்கே
அமுதங் கடைந்து திரட்டியெடுத்து
    அமரர்க் குதவும் பெருமானே
களிக்குஞ் சுரும்பர் துதைத்துணந்தேன்
    கக்குங் கமல முறுக்குடையும்
கழனித் தடஞ்சூழ் திருநாடா
    கண்ணா அரிகேசவ முகந்தா
தெளிக்கும் பொருநைந் தடந்துறைவா
    திருவாய் முத்தந் தருகவே
தெள்ளிப் பயிலும் திருப்பேரைச்
    செல்வா முத்தந் தருகவே. 9

சந்தாடவியும் பாதிரியும் தடந்
தாமரையும் விளை வயலும்
சதுமா மறையும் விழாவொலியும்
தழைக்கும் பிள்ளைக் குழாவொலியும்
நந்தா வளமைத் திருவழுதி
நாடா பரமபத வீடா
நறுந் தாதளையும் பசுந்துளவ
நாராயண சீதர முகுந்தா
கொந்தார் மலர்ப்பூங் கரியகுழல்
கொவ்வைக கனிவாய் மணிமுறுவல்
கொடிபோல் நுடக்குந் துடி இடையக்
குலக் கோமளக் கோசலையளித்த
சிந்தா மணியே மரகதமே
திருவாய் முத்தந் தருகவே
தெள்ளிப் பயிலுந் தமிழ்ப்பேரைச்
செல்வா முத்தம் தருகவே. 10

முற்றும்.

---

## வருகைப் பருவம்

விதுரன் மனைவி லடிசில் நுகரும்
விரதன் வருக வருகவே
வித ரணிகமு மறிவு முடைய
விமலன் வருக வருகவே
அதிரு மணியு மரையின் வடமும்
அசைய வருக வருகவே
அழகு கரிய குழல்கள் சரிய
அபிமன் வருக வருகவே
புதிய மதியின் வதன வெயர்வு
பொலிய வருக வருகவே
பொழியு நறவு விறவு துளவு
புனையு மனகன் வருகவே
மதுர முறு செல்வதர வமுதம்
உதரம் வழிய வருகவே
வருணன் வருகு முபயசரண
வரதன் வருக வருகவே 1

எரியுமனல் கதுவும் விழி நிருதர்கு சமர்புரி
இகல் தொலைய விடு கணையினால்
இருவினையும் ஒருசிறிது தொடரவரிதென வருகும்
எவர்தமையு மடிமை கொளுமால்
முரிபுருவ நுதல் வனிதை சனகி முலை முகருதமு
முகலளித விதரணமு ளோன்
முருகு விரிதரு துளவு மணமலிய நெடிய மணி
முடியினணிபெற வணைகுவோன்
உரிய சதுமறையு முனிவரரு மயனொடு பரவும்
உபயபரிபுர சரண நீ
டுலக முழுவது முதர மையவொரு தனிநுகரும்
ஒளிரிரவி குல மரபினோன்
நெரிய மருதமு முதிய சகருமுதை விதரணிகள்
நிமலன ரவணை துயிலுமால்
நிறைய மகிமையுமளவில் குணனும் வடிவழகுமுடைய
நிகரில் முகில் வணன் வருகவே. 2

புகலருஞ் சதுமறை யருந்தவர்
புலவர் பண்டிதர் பலர்கொட
புதிய பங்கய சரண் வணங்கிய
புதிய வெண்டிரையுததி சூழ்
செகமடங்கலு நொடியினுண்டுமிழ்
திருமணந் தொளிர் பரவவோர்
திரிபுரந் தழல்பட முனிந்தருள்
சிவனயன் தொழ வருகவே
தகர முங்கிய பரிமளங் கமழ்தரு
தடம்புய செயதரா
சமர் முகந் தனில் நிருதர் வெம்படை
சரியிடுஞ் சிலையபிம நீள்
மகரகுண்டலமசைய இங்கெதிர்
மகர வண் குழை வருகவே
வருணன் வந்திரு சரண் வணங்கி
மனதிகிழ்ந் தெதிர் வருகவே, 3

கலை மணந் தொளிர் துவள வெண்பிறை
கதுவிடுஞ் சிலை நுதலினாள்
கவின வந்தரு சனகி சம்ப்ரம
கனதனம் பொருது பூதமால்
உலைமுகந்தனில் அடிபடும் பொழுது
ஒளிரும் ஒண்சுடர் வயிரவா
ளொடு முனிந்தடர அவுணர் பொன்றிய
உயிருண் சமன் வருகவே
திலகலஞ்சரி துவசைந் தொளி
திகழ வண்டின முரலயவ
செழு நறுந்துகள் முகைவிரிந்தவர்
சிறிய பங்கயமெனு நறு
மலர்மடந்தையும் நிலமடந்தையும்
மருவுதிண் திறல் வரதநீள்
மகரகுண்டலமசைய விங்கெதிர்
மகர வண் குழை வருகவே.

உளநெகிழ்ந்திரு பொழுதும் வந்தனையொடும்
உவந்து எதிர் பரவவே
உபய செஞ்சரண் முடிபுனைந் தொளிர்
உயர் பதந் தரு கருணைமால்
அளை கவர்ந்திடை மகளிர் தங்குடில்
அணைதருங் களிறது கொடே
அடிபடும் பொழுதுடல் குழைந்து
அழுதது நின்றவன் வருகவே
குளநிரம்பிய புனலினுங் கரை
அருகு வண்டது மதகு நீள்
குவலயம் படுதரு நெருங்கிய
குளிர் நறும் பொழிலிடையும் வால்
வளை முழங்கிய குருகையம்பதி மருவு
நங்கை கண்மணி நன்கு
வலவனிங்கித வினிதை கொண்டருள்
மகர வண்குழை வருகவே,

முடிமீதொளிர் சூழியத் தொகையின்
முழுவெண் திங்கள் கற்றை நிலா
மூரிக் கடல் சூழ் புவன மெனு
முற்றுந் தழைய வடிந்த வெள்ளைக்
கொடி போலொசியுங் குழையுமணி
குழையுங் குழையவுடல் குழையக்
குழைத்து நுதலினிருந்திலதக்
குறுவேர் வழிய விடைகழியின்
அடிமேலடிவைத் திருகை சுவர்
அதனைப் பிடித்து வருதலிற்றள்
ளாடி விழுதத் தளிப்பின் மலர்
அங்கை பதித்துதி தவழ்ந்தெனது
மடிமீதிருந்து களப முலை வள்ளத்து
அமுதுண்டிட வருக
மகரக் குழையே யென்னிருகண்
மணியே வருக வருகவே 6

பண்டா லிலையிலரங் கத்துப்
பாதாழியிற் கண்டுயில் கூரும்
பச்சைப் புயலே பணா மகுடப் படப்
பாந்தளின் கண்பிதுங்க நறுந்
தண்டாமைரச் செஞ்சரண் பெயர்த்துத்
தள்ளிக் கடைவால் பிடித்து தெறி
தழைக்கும் படிக்கு நடம்புரிந்த
தலைவா கடல்சூழ் உலகமுழு
துண்டாதர வோடுமிழ்ந் தளந்த
வொளியே வொளிரு மரகதமே
ஒரு வாணுதல் பண்டுளங்களிப்ப
உயர்வான் முகடு கிழித்தெழுந்து
வண்டார் தருவின் மலர் கொணர்ந்த
மாலே வருக வருகவே
மகரக் குழையே யென்னிருகண்
மணியே வருக வருகவே. 7

சிந்தாமணியே மரகதமே
தேவே தேவர் பெருமானே
தேடும் பொருளே நாடோறும்
செய்யும் தவமே தவப் பயனே
எந்தாய் நந்தா விளக்கொளியே
எங்கட்குயிரே பரகதியே
எழுதாமறையின் வடிவே சொல்
எழுத் தெட்டினுக்குபொரு மயமே
கொந்தார் துளவப் பசுந்தாமக்
கோவே நிருதர் குலக் கூற்றே
கூடுபுனல் நீராடி வலங்கொண்டு
திருமஞ்சனக் கொலுவில்
வந்தாதரித்து வருணனடி
வணங்கும் புயலே வருகவே
மகரக்குழையே யென்னிருகண்
மணியே வருக வருகவே. 8

ஆராவமுதத் தில வித ழின்
அமுதத் திவலை மார்பொழுக
அரைநாண் வடமுமணியும் மருங்கு
அசையக் குழையுங் குண்டலமும்
சீரார் திருவிற் பொலியு நுதற்றீட்டுங்
குறுவேர் வரும்ப வருள்
செய்யுங் கமல முகமிலங்கத் திருத்தாட்
டுணைப் பெற்றண்டையொலி
பார்மீதெங்கள் செவிகுளிரப்
பழகு நெறி நாடோறும் வளர்
பசுந்தார்த் துளவு மணங்கமழும்
படிநீ நடந்துள்ளடி பெயர்த்து
வாரார் களபக் குரும்பை முலை
வள்ளத் தமுதுண்டிட வருக
மகரக் குழையே யென்னிருகண்
மணியே வருக வருகவே, 9

அருமைப் பெருமான் பிறவியொழித்து
அருளும் பெருமான் காதல சங்
காழிப் பெருமான் வானவர்க்கும்
அருநான் மறைக்கு மெட்டாத
தருமப் பெருமான் பசுந் துளவப்
தாமப் பெருமானேழுலகுந்
தழைக்கும்படி கன்றளந்த நெடுஞ்
சரணப் பெருமான் மன்னுயிர்க்குங்
கருமப் பெருமான் முத்திவழி
காட்டுப் பெருமான் பூம் பொருட்டுக்
கமலாசனத்து வீற்றிருக்கும்
மன்னிப் பெருமான் தமிழ்க் குருகும்
பெருமைப் பெருமானென் னருமைப்
பிள்ளைப் பெருமான் வருகவே
பேராயிரம் பெற்றுயர்ந்த திருப்பேரைப்
பெருமான் வருகவே. 10

முற்றும்.

---

## அம்புலிப் பருவம்

மதியுடைத் தாய் மண்டலம் பெற்று வான்
முழு மதிக்கடவு ளெனவரு தலால்
வடியிட்ட தெள்ளமுத மய்மாகி
யானந்த மகராலாயத் தெழுதலால்
நதியொடர வறுகெருக் கணியுஞ் சடைக்காட்டு
நம்பனுக் கொரு கண்ணதாய்
நாடொறு முயிர்ப்பயிர் தழைப்ப அருள்பொழிதலால்
நல்துணை யுனக்கிவன் காண்
முதிர விளையுங் கொழும்பவளக் குலைச்சாலி
மூடுதொறும் வாய்மடை தொறும்
மூரிப் பகட்டு வரிவாளை வெடிதரவியலை
மோதும் புனற் கேணியும்
அதிரு மணிமதகும் வளையுகள் வழுதி நாடனுடன்
அம்புலீ ஆடவாவே
ஆழிநீர் வண்ண னென்னும் வாழிமாதவனுடன்
அம்புலீ ஆடவாவே. 1

இருவினைச் சென்ன வலைகட்டறுத்து அழியாத
இன்ப வீடெய்தும் பொருட்(டு)
இணைமலர்ச் சேவடி யடைந்தவர்க் குதவிடுவன்
இவன் வருண னாதரிக்கும்
திருந் திச் சமுக தீர்த்தத் துறைத்
தீம்புனல் திவலையொரு சிறிதுபடிலோ
செக மண்டலத்துன்முயல் முகமண்டல முகற்கறை
சிதைத்து வண்டடை கிடப்ப
முருகுவிரிதரு நறுங் குமுதவாய் மடமங்கை
முகிழ்முலை மணம் புணர்ந்து
முன்னுங் களங்கமற்றப் பாலும் வைகுண்ட
முத்தி மண்டல மெய்தலாம்
அருமறைக் குரியவொரு பொருளா யிருப்பானிவன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
அம்புலீ யாடவாவே. 2

வெவ்வரா விடமொழுகு கறையனற் பகுவாய்
விழுங்கி மீளவும் உமிழ்தரும்
மச்சி லென்றுலகிலுரைசெய் வரதனாலுனுடல்
வெளுத்தற மெலிந்து குப்புறற்
றெவ்வுலகமுந்திரிந் தாவதென் பெரியோரை
எளியோர் துணைக் கோடல்நன்
றிருகனற் கட்செவிப்பகை முடித்தற் குவணன்
இவனிட்ட ஏவல் கடவான்
செவ்வுபட எட்டிரட்டித்தகலை யுடையை நீ
சிந்திப் பதற் கரியவாம்
திகழ் தருங்கலை யறுபத்து நாலுடைய
வொரு செம்மலிவன் வைகுண்டமாம்
அவ்வுலக முந்தாகத் தருவன ஃதறிந்து
அம்புலீ ஆடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
அம்புலீ ஆட வாவே. 3

பைத்தலை நெடுஞ் சுடிகை விடமொழுகு
    கட்செவிப் படவரவு தொட்டரினுநீ
படரொளி மழுங்கி வான் முகடொளிக்குவை
    பெரும் பாம்பு நீண்டிக் கிடந்த
நித்திரை மயக்கத்து மொளி மழுங்கானிவன்
    நெடிய வானிடை நுழைந்து
நிலையிலா தோடித் திரிந்து முல்லை
    நீயிவன் நீடூழி யிடிபெயர்ந்து
முத்த வாணகை விமலையடிவருட வானவர்கள்
    முனிவ ரஞ்சலி செய்யநீள்
முத்திதரும் வைகுந்தம் வீற்றிருப்பவன் அந்த
    அம்புலீ ஆட வாவே
அத்தகைமை தோறு முன்னிலு முயர்ந்தவன் இவன்
    அம்புலீ ஆட வாவே
ஆழிநீர் வண்ண னென்னும் வாழிமாதவனுடன்
    அம்புலீ யாட வாவே. 4

செங்குருதி யலைமண்டி யாறெடுத் தோடச்
    சிலைக்கால் வளைத்து விசயன்
தேத்தரசனைக் கொன்று கூற்றருந்தும்படி
    சினத்திடும் போா் முகத்துப்
பொங்குக திராயிரம் தங்கு செஞ்சுடரவன்
    பொழுது காணும லொளிர்செம்
பொன்னிறத் திகிரியிர்லிவன் மறைத்தனனன்று
    போதாக்குறைக் கொளிரும் வெண்
சங்கு கொண்டுன்னையும் மறைந்திடாமற்
    கலை தளர்ந்து மெலிவெய்துறரமல்
தாதள வெருப்பொடித் தெரியாமல் முன்றில்
    தவழ்ந்து விளையாட வாவென்
றங்கை மலர்விரல் குனித்துனை யழைத்தவனிவன்
    அம்புலீயாட வாவே
ஆழிநீர் வண்ண னென்னும் வாழிமாதவனுடன்
    அம்புலீ யாட வாவே 5

கூறருந்ததியை நீ யுடையவன் இவன் அமரர்
கூறருந்துதியை யுடையோன்
குறைபடு தடங்கலை களையுடையை நீ இவனுமோ
குறையாத கலைக ளுடையான்
வீறுதரு முருவிலி மதிங்குடையை நீயிவன்
விதரண மதிக் குடையவன்
விண்ணிடை கரந்தொளி யொழிந்திடுவை நீயிவன்
வேதநுண் பொருளி னொளியான்
ஊறுபட வோடித் திரிந்திளைத் திடுவைநீ
ஒருநாளு மிளையா னிவன்
உவரிப் புனற் பங்க மூடுதிப்பாயிவன்
உம்பரா ழியினுதிப் போன்
ஆறலை புரட்டு பொருனைநதித் துறைவனுடன்
அம்புலீ ஆட வாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
அம்புலீ ஆட வாவே 6

சந்தப் படாமுலைத் தார்குழல் கோமளத் தையல்
சானகி பொருட்டுத்
தடமதி லிலங்காபுரம் பொடி படுத்தித்
தகர்த்து முடிபத்து மண்மேல்
சிந்தச் சரந்தொட்ட சிலைவீர ராகவன்
சிறு குழந்தைப் பிள்ளையாய்
திருவிரற்றலை சுட்டியுனை யழைத்தால் வரச்
செய்யா திருக்க முறையோ
முந்தப் பெருந்தக்க வேள்வியில் தேவர்கள்
முறிந்துதிசை கெட்டோடு நாள்
முழுமதிக் கடவுள்நீ பரிபவப் பட்டகதை
பொழியக் கணக்கு முண்டோ
அந்தக் கணக்கின்று வந்திருக் கின்றதினி
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
அம்புலீயாட வாவே, 7

தவநெறிக் கௌதமன் பண்ணிய கலியுகைபுரந்
    தரனொ்டு மணந்த வதனல்
தவமுனி யறைந்த சாபத்திலவள் கல்லுருத்
    தாங்கிய தொழித்த தெங்கோன்
புவனமொரு மூன்றும் ஈரடியாலக் கின்ற
    பொற்களல் துகளுனக்கும்
புனித பூரண செவ்வி முகமண்டலக் கறைப்
    புரைதீர வரமளிக்கும்
சிவனு மயனும் வெள்ளை அயிராவதத்தனும்
    செஞ்சுடர்க் கடவு ளோனும்
தேவர் முப்பத்து முக்கோடியும் அறுமுகச்
    செம்மலுங் கைம்மலைக் கோட்
டவனுமுறை முறைபரவு நிகரில்முகில் வண்ணனுடன்
    அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
    அம்புலீ யாட வாவே. 8

விண்டடவி முகமாயிரங் களுமொளித்து நெடு
    வெளியின் வந்தொரு முகமதாய்
வெண்திரைக் கங்கைப் பெம்புன்னல் பரந்தென
    விரிந்தவவ் வெள்ளத்தின் மேல்
தண்டரள மணியிழந் தாகாய நள்ளிடைத்
    தயங்கிய சஞ்சல மெனத்
தாரகைக் குலமொடு தவழ்ந்து மேன்மேலுநீ
    தலைப்பட்டு வருத லானும்
புண்டரிக மலர்முகை முறுக்குடைந்தலருமொரு
    பூவெனப் பொலிவு பெற்றாய்
புகலரிய மதிவள முறைக்கில் முழுமதியெனப்
    புகல்கின்ற துண்மை கண்டாய்
அண்ட பகிரண்டமும் நிரம்பிய இவன்றனுடன்
    அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
    அம்புலீ யாடவாவே. 9

என்னென்று நிகரிரவின் இருளன்றி நீயன்பர்
இதய விருணீக்கவறியாய்
இருவிசும்பிற் பொலிந்து வாழிவன் புவனர்கள்
எங்கணும் பொலிவதோராய்
பொன்னந் தகட்டிதழ்க் குமுத மல்லாலுனைப்
புதுமலர் திறக்க வறியாய்
போலியல்லா இவன் போலியன்றால் வந்து
புதுநிலா மணிமுன்றில் வாய்
மன்னுஞ் சரோருகப் படுகரும் புளினவெண்
மணற் குன்றமுஞ் சோலையும்
மடவனப் பொடையோடு கூடிப் புணர்ந்தக
மகிழ்த்து பிரியாது செஞ்சூட்
டன்னங்கள் விளையாடு தென்பேரை மாயனுடன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமாதவனுடன்
அம்புலீ யாடவாவே. 10

முற்றும்.

---

## சிற்றில் பருவம்

களிக்கும் சுரும்பர் துதைந்து துழுது
கனைக் காலசைத்துச் சில்லோசை
கனிந் தூற்றிருப்ப மிழற்றுந் தொறும்
கக்குங் கலுழி நறவுபரி
மளிக்கும் பசுந்தார்ச் செழுந்துளவு
மணக்குங் குழகர் கார்மேக
வண்ணா கருணை மடைதிறந்து
வழியும் புயலே பேரின்பம்
அளிக்கும் பெரிய தெருவீதி
அருகே வழிக்குப் புறம்பாக
அறியாப் பருவப் பெண்களொடுந்
தமைக்கும் வண்டலிது கண்டாய்
தெளிக்கும் தமிழ்த்தென் திருப்பேரைச்
செல்வா சிற்றில் சிதையேலே
திரையார் பொற்குன்றந் தடந்துறைவா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே 1

வேண்டக் கிடையா வாரமுதம்
விரைதெண் டிரைநீர்க் கடன்முகட்டின்
வெற்பைப் பிடுங்கி மத்தாக
விடவா ளரவுக் கயிறுசுற்றிப்
பூண்டக் கணமே சுவைமதுரம்
பொங்கிப் பெருகக் கடைந்தெடுத்துப்
புலவர்க் களிக்கும் பெருமானே!
பொருந்தா நிருதர் போரேறே!
காண்டற் கரிய கொழுங்கிரணங்
கக்கும் பசிய மரகதமே!
கதிரா ழியிற்செங் கதிர்மறைத்த
கருணைப் புயலே பூமகள்கை
தீண்டச் சிவக்கும் புலனருளாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 2

வள்ளைக் குழைவே னெருங்கருங்கண்
மதிவா ணுதற்கோ மளப்புளக
வனமா முலைக்குங் குமச்சுவடு
மடவா ரொடும்போய் விளையாட
அள்ளிக் குடிக்குந் தடம்பொருநை
ஆற்றிற் கூடு புனற்றுறையின்
அருகிற் சிறுபே தையர்களொடுத்
தடங்கா விருப்ப மீதூர்ந்து
தள்ளிப் பால்மாற் றரும்பசும்பொன்
தகட்டின் வயிரூ ரியங்குயிற்றிச்
சமைக்குந் திருமா மணிமுறத்துத்
தருதா மரைக்கை சேப்பமணல்
தெள்ளிக் கொணர்ந்து தரவிளைத்த
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா:
சிறியேஞ் சிற்றில சிதையேலே. 3

தருக்கா மலர்ப்பூம் பொழிலும் வயல்
தடமுந் தருதென் திருப்பேரை
தழைக்கும் படிநூற் றெண்மர்தொழுந்
தாமோதர சீதர முகுந்தா
ஒருக்கா லெனுமவ் விருக்காலும்
உணராப் பொருளே பரஞ்சுடரே
ஒருவா ணுதல்பண் டுளங் களிப்ப
உயர்வான் முகடு கிழித்தெழுந்து
மருக்கால் நறுமென் மலர்கொணர்ந்த
மதமோ பதினா யிரங்கோப
மங்கை யர்கள் புளகமுலை
மணந்து கனிவா யமுதுண்ட
செருக்கோ வுனக்கீ தியல்பன்று
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

கோவே கோவா மரகதமே
கொடும்போ ரரக்கர் குலக்கூற்றே
குளிர்பூந் துளவத் திருத்தொங்கல்
குவவுத் தடந்தோட் காயாவாம்
பூவே பூவின் பொலன்பொகுட்டுப்
புதுமென் மணமே யருள்சுரந்து
பொங்கிப் பெருகி யுவட்டெறிந்து
பொழியும் புயலே! கற்பகப்பூங்
காவே முதுகோ சலைதவமே
கண்ணே கண்ணி னுண்மணியே
கதிர்நித் திலவெண் மணல்நினது
காலி னுறுத்தல் கடனன்றே
தேவே தேவப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

வன்னக் களபப் புளகமுலை
மடவா ரெனுங்கோ வியர்கள்திரு
வாய்ப்பா டியிற்புக் களைகவர்ந்த
மணிவாய்க் கள்வ னென்று கட்டி
உன்னிப் பொருமி யழவடித்த
துண்டே லவர்கள் விளையாடும்
ஒளிர்நித் திலவெண் மணற்சிற்றில்
உனக்கின் றழிக்க முறைகண்டாய்
கன்னிக் கமுக மிடறொடியக்
காய்க்கும் பசுங்காய்க் குலைசிதறக்
கதலிக் குலங்க ளடிசாயக்
கயல்பாய்ந் துளைந்து வாலறையுஞ்
செந்நெற் பழனத் திருப்பேரைச்
செல்வா சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 6

பண்ணே றியமென் குதலைமொழிப்
பவளக் கனிவாய்க் கூறுநகையும்
பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயமுங் கண்டழகு
கண்ணே றெளியேம் பட்டனமென்
றெண்ணிக் கருத்து வேறுபட
கணக்கன் றுலகில் மன்னுயிர்க்குக்
காவற் கடவுள் நீயன்றோ
மண்ணே ழையுமுண் டுமிழ்ந்தளந்த
மாலே வேலைப் புனல் சுவறி
மறுகக் கணைதொட் டிடுமுகுந்தா
வருணன் றினமா ராதனைசெய்
தெண்ணீர்ப் பொருநைத் தடந்துறைவா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெளிக்குந் தமிழ்த்தென் திருப் பேரைச்
செல்வா சிற்றில் சிதையேலே. 7

தூடிக்குஞ் சிகரப் படாம்பொதித்த
தடமா முலைக்குங் குமச்சுவட்டுத்
தழைக்குங் குறுங்கண் சாந்தொழுகித்
தருபா லசோதை மகிழ்ந்தூட்டக்
குடிக்கும் புயலே யிலங்கையில்வெங்
கொடும்போ ரரக்கர் குலக்கூற்றே
குனிக்குஞ் சிலைக்கைத் தடக்களிறே
கோவே பசுந்தண் டுழாய் மாலை
முடிக்கும் பொருளே முத்தொழிற்கும்
மூவா முதடல யழியாத
முத்திக் கொருவித் தாகவந்து
முளைக்கும் பொருளே பாருபெற
வடிக்குந் தமிழ்த் தென் திருப்பேரை
மாலே சிற்றில் சிதையேலே
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே சிற்றில் சிதையேலே 8

கொத்தோ டசையப் பசுத்துளவங்
குடக்கூ டரும்பி முளைத்தெழுந்து
கொழிக்குந் தவளப் பிறைநுதலிற்
குறுவேர் வொழுக வணிந்தசுட்டி
முத்தா னதுவெண் ணிலவெறிப்ப
முகத்தா மரையி னகையிலங்க
முதுகுண் டலமும் வார்காது
முழுமா மணிபொற் சோதிவிட
அத்தா வருணன் றினம்பரவும்
அரிகேசவ நாரண முகுந்தா
அடல்வா ளரவிற் கண்டுயிலும்
ஆழிப் புயலே யாய்ச்சியர்கை
மத்தா லடிப்ப வெண்ணெயுண்ட
வாயா சிற்றில் சிதையேலே
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே சிற்றில் சிதையேலே. 9

அன்போ டணைத்து முலைகொடுத்தின்
 னமுதூற்றறிருக்கும் புனலாட்டி
அருங்கட் கடைக்கஞ் சனமெழுதி
 ஆரந் திருத்திப் பட்டுடுத்தி
உன்பே ரிடுவே னென் குழவிக்
 குள்ள தயவாற் றனிசமைத்த
உயர்மா ளிகையு மாடரங்கும்
 ஒளிர்வே திகையு நீயழிக்க
வன்பா லோடி வரவுனக்கு
 வழக்கன் றுலகிற் சிறுபேதை
மகளி ருந்து விளையாடும்
 வண்டற் றுகள்சே வடிபடுமே
தென்பே ரையினங் குலநாத
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 10

முற்றும்.

---

## சிறுபறைப் பருவம்

வானுடர் முப்பத்து முக்கோடி யுஞ்சது
 மறைக்கடவு ணான்முகவனும்
மழுவலா ளனுமறு முகச் செம்மலுங்கைம்
 மலைக்கோட்டு வேழமுகனும்
ஏனோரும் விச்சிரக் குலிசபதி யுமகிழ்ந்
 தெண்டிசா முகப்பாலரும்
இருவிழியு மிருசெவியு மிதயதாமரை மலர்ந்
 தெக்கால முந்தழையவே
கானூறு பச்சைப் பசும்பூக மடல்விண்டு
 கக்குங் கொழும்பிரசமுங்
கதலிக் கொழுங்கனி யுடைந்துவழி மதுவுங்
 கலந்தோடி யலைமண்டியத்
தேனாறு பாயும்வயல் சூழ்வழுதி நாடனொரு
 சிறுபறை முழக்கியருளே
தென்றிருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்
 சிறுபறை முழக்கியருளே. 1

பூவாருங் கொன்றைச் செழுஞ்சடா டவிமுடிப்
புனிதபூ ரணனிரட்டும்
பொற்றுடி யெனச்சொற் றிறம்பாத கனகவிப்
புலவர்திண் டிமமென்னவும்
மேவுகதிர் மணிமகுட கோடிநிபு டஞ்செயும்
விருதரசர் மணிவாசலின்
விதரணக் கொடைவெற்றி மணவொலி கறங்குதெரு
வீதிமும் முரசமெனவுந்
தாவுசீ ரிட்டுடன் விசித்துறுக் கித்தொணி
தழைத்ததொண் டகமென்னவுந்
தவறுது சதிமுறையி னண்டகோ ளகைமுகடு
தடவியது செவிடுபடவோர்
தேவதுந் துயியெனத் திருவழுதி வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றிருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்!
சிறுபறை முழக்கியருளே. 2

கறைகொளுஞ் சமரில்வடி வாளொடு இராவணன்
கைகளிரு பதும்விழுதுபோற்
காறுடர்மண் ணில்விள்ளிக் குப்புற்று நிற்குநிலை
கண்டுதிரு வுளமிரங்கி
உறுதிபட வின்றுபோய் நாளைக்கு வாவென்
றுரைத்தராகவ! வெருவியன்
றோனை மூலமென் றேதாமுன் னோடிவந்
துதவுமாதவ! சீதரா!
நறையொழுக மடன்முகை முறுக்கவிழ்ந் தலருமொரு
நளினப் பொகுட்டாசன
நள்ளிடை பதிந்துபைந் தாதளைந் திசைபாடி
நாகிளம் பேடையோடுஞ்
சிறைவண்டு கண்படுக் கும்வழுதி நன்னாடா!
சிறுபறை முழக்கியருளே
தென்றிருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்!
சிறைபறை முழக்கியருளே. 3

அண்டபகி ரண்டமு மதிர்ந்துகுல வரையெட்டும்
அசையாம லெண்டிசைதொறும்
அளிகவுள கம்பக் கடாக்களிறு நிலைபெயர்ந்
தடிச்சுவ டெடுத்திடாமற்
கொண்டவட வைக்கனற் கண்பிதுங் கக்கொடுங்
கோளரா முடியிற்படங்
குலுங்காம லாமைநெடு முதுகுகுளுக் காவண்ட
கோளகையின் முகடுவெடியா
விண்டடவு தாரகைக் குலமடங் கலுமண்ணில்
வீழாம லுயர்செழும்பொன்
மேருகிரி சாயாம லோடியிரு கரைதோறும்
வெண்ணிலா வுமிழுமுத்தந்
தெண்டிரை சுருட்டுபொரு னாநதி நெடுந்துறைவ !
சிறுபறை முழக்கியருளே
தென்றிருப் பேரைவரு நங்குழைக் காதமுகில் !
சிறுபறை முழக்கியருளே. 4

கங்கா நதிச்செழும் புனல்யமுனை சரசோதி
கற்புரச் சுவைமணக்குங்
காவிரி யெனத்தேவர் வடியிட்ட வமுதேகக்
கமழுந் திரைப்பொருநையும்
மங்காத சதுமறைக் குரியவேள் வியும்விழா
வணியுமக வொலியுநாளும்
வளமைபெறு குலநாத பரமபத வீடாள !
வயல்கடொறும் வாய்மடைதொறுஞ்
சங்கார வாரஞ்செய் தகடுளைந் தலறிக்
தவழ்ந்தேறி முத்துயிர்க்குந்
தண்ணந் தடந்தா மரைப்பொகுட் டாசனத்
தமனியப் பொற்கோவிலிற்
செங்கா லனந்துயிலும் வழுதிவள நன்னாட !
சிறுபறை முழக்கியருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்!
சிறுபறை முழக்கியருளே. 5

நீறுபடு தவளவெண் பொடியாட வார்சடை
நெடுந்திரைக் கங்கையாட
நிலவாட முகைமுறுக் கவிழ்ந்தும்மை யாடவரன்
நின்றாட வமரராடப்
பாறுபடு நெட்டிலைச் சுடர்வேல் விடுங்கொடும்
படையிரா வணன் மகுடமோர்
பத்துந் தகர்ந்தாட வெம்பேய் குறும்பேய்
பறந்தலை கவந்தமாடத்
தாறுபடு கதலிக் கொழுங்கனி யுடைந்துவழி
சாறுமாங் கனியினறவுந்
தருமுடப் பலவினற் கனியுடைந் துப்பெருகு
தண்ணறவு மலைமண்டியே
சேறுபடு பள்ளவயல் சூழ்வழுதி நாடனொரு
சிறுபறை முழக்கியருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்!
சிறுபறை முழக்கியருளே. 6

பொருதிரை யெறிசல ராசி யுடுக்கும்
புவனத் திருமாதும்
பொங்கு சினந்தலை மண்ட வடுஞ்சமர்
புக்கெதிர் வருவோர்செங்
குருதி படும்படி பொருது மணம்புணர
கொற்றக் குலமாதுங்
கோதறு வண்புகழ் சேரனு கூலக்
கோமள மாமாதும்
மருமலி சததள மண்டபமீது
மகிழ்ந்துறை பூமாதும்
வடகலை தென்கலை முழுது முணர்ந்த
சொல் மங்கையு நாடோறும்
திருவுள மகிழ்தர வழுதி நன்னாடா!
சிறுபறை கொட்டுகவே
தென் பேரையில் வருநங் குலநாதன்
சிறுபறை கொட்டுகவே. 7

உழுதுழு திசைபயி லளியொரு கோடி
உதைந்து துதைந்தாட
வொளிர் மடல் முகையவிழ் துளவமர்
மால்குருகூர னுவந்தோதும்
பழுதறு முதுதிரு வாய்மொழி நூல்செவி
பற்பலவுறு நேயன்
பண்டுல கங்களை யுண்டுபி னளவு
படுத்துந் திருமாமால்
முழுமறை முறையிடு மிருசர ணுலயன்
மூரிக் கயமூடும்
முதுபுன லோடையு மகழியுய் வால்வளை
மொய்க்கும் கழனியினும்
செழுமலர் மணமலி வழுதி நன்னாடன்
சிறுபறை கொட்டுகவே
தென் பேரையில் வருநங் குலநாதன்
சிறுபறை கொட்டுகவே. 8

புவனமு மண்ட கடாகமும் வேலைப்
புணரித் திசையெட்டும்
பொங்கழல் கதுவிய கண்கரி யானைப்
புகர்முக மலையெட்டும்
குவடுபடும் பொலன் வடவரை முதலாங்
குலகிரி யோரெட்டும்
கொடுவிட முடவும் பஃறலை மகுடக
கொளர வோரெட்டுந்
தவமுனி வர்சுரர் மகபதி முக்கட்
சடைமுடி புடையோனும்
சதுமுக னறுமுக னொருகொம் பேந்திய
தந்திமுகத் தோனும்
செவிகுளி ரத்திரு வழுதி நன்னுட
சிறுபறை கொட்டுகவே
தென் பேரையில் வருநங் குலநாதன்
சிறுபறை கொட்டுகவே, 9

அளிசுற் றியதன் டறப்பொதியத்து
அருஞ் சாரலிற் பைங்கிழங்கெடுக்கும்
அம்பொற குழியிற் சுடர் விரிக்கும்
அருங்கால் வயிரங் கிடந்திமைப்பத்
துளி பட்டொழுகும் வரையருவி
சுழிக்குந் தொறும்பொன் னொழுக்கெறியக்
சுவையூற் றிருக்கும் புனற்பொருநை
சுருட்டுதிரைச் செம்மணி கொழிப்பத்
தளைவிட் டலரும் பசும்பாளைத்
தலைப்பூங் கமுக மணிமிடற்றுத்
தாங்கும் பவளக் குலைகவிப்பத்
தடஞ்சால் வழியூர்ந் தகடுளைந்து
வளைமுத் துதிர்க்கும் வயற்பேரை
மாலே சிறுபறை கொட்டுகவே
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே சிறுபறை கொட்டுகவே. 10

முற்றும்

---

## சிறுதேர்ப் பருவம்

உரைக்குஞ் சதுமா மறைதனக்கும்
உயர்வான வர்க்குமெட்டாத
உண்மைப் பொருளே கன்றொடுகுன்று
உருகும்படி வேய்ங்குழலூதி
நிரைக்குப் பின்னே நடந்தருளும்
நீலப்புயலே போரேறே
நிமலா சமராடிடுங் கொடிய
நிருதர் குலத்துக்கொருகூற்றே
வரைச்சந் தகிலும் செம்மணியும்
மதவாரணக் கிம்புரி மருப்பும்
மயிற் பீலியும் வெண்நித்திலமும்
வாரிச்சுருட்டிக் கரைபொருது
திரைக்குந் திரைத்தன் பொருநைநதிச்
செல்வா தடந்தேருருட்டுகவே
தென் பேரையில் நங்குலநாத!
செம்பொற்றடந் தேருருட்டுகவே 1

மேல்பால் முளைக்கும் பிறையெயிற்று
வெங்கட்கொடிய நிருதர்குழாம்
வெல்லுந் தடக்கைச் சிலைராமன்
விரிதெண்டிரை நீர்க்கடல் முகட்டின்
பாலாட ரவிற் கண்டுயிலும்
பசுந்தார்க்குழகன் கஞ்சன்விடு
பாரச்ச கருமருது மொடி
படத்தானெரிக்கு மொருமுகுந்தன்
கால்வாய்ப் புனலிற் கேணியினிற்
கழுநீர்க் குழியின் வாய்மடையிற்
கருஞ் செற்றினில் நல்லருங் கயத்தில்
கமழ்பூந்துறையில் வெகுண்டெழுந்து
சேல்பாய் வழுதித் திருநாடா!
செம்பொற்றடந் தேருருட்டுகவே
தென் பேரையில் நங்குல நாத!
செம்பொற்றடந் தேருருட்டுகவே. 2

உருவா யுயிரா யுணர்வாகி
உள்ளும் புறனு முளனாகி
உரைக்குஞ் சமய மாறினுக்கும்
ஒன்றும்பலவு மாயடங்கி
அருவாய் நிறையு நின்பெருமை
ஆர்க்குந் தெரிய வசமன்றே
ஆழிப் புயலே யருட்கடலே
அரிகேசவ சீதரமுகுந்தா
மருவார் பொழியிற் கேணியில்வாய்
மடையில் சுழியில் படுவரம்பில்
வளைமுத் துயிர்க்குந் திருவழுதி
வளநாட்டுறை யெம்பெருமான்
தெருவீதியில் நூற்றெண்மர் தொழச்
செம்பொற்றடந் தேருருட்டுகவே
தென் பேரையில் நங்குல நாத
செம்பொற்றடந் தேருருட்டுகவே. 3

அன்பாற் பணிந்து தினம்வருணன்
ஆராதனை கொண்டருள்முகுந்தா
அடியா ராசைப் புரிமுறுக்கி
அரும்பொற்கயிற்று வடம்பூட்டி
வன்பால்விடுத்து நெகிழ்ந்து நெஞ்சம்
மணிவீதியி னள்ளிடைநினைந்து
வந்த ததியரிருமருங்கு மகிழ்ந்து
முறையே பிடித்திழுப்பப்
பொன்பொற் பொருந்து செழுந்திலதம்
புவனத்திருவாள் நுதற்றிலதம்
பொங்கிப பரந்த சலராசி
புடைசுற்றிய பூலோகத்துத்
தென்பாற் றிலதமெனும் பேரைச்செல்வா
தடந் தேருருட்டுகவே
செழுந் தார்த்துளவு மணங்கமழும்
தேவே தடந்தேருருட்டுகவே. 4

தருநிழ லினிடையினிது வீற்றிருக்கும்
புரந்தரரு முனிவரருமுளரிச்
சதுமுகக் கடவுளும் முக்கட்கொழுங்கனிச்
சடைமுடிச் சிவனும்வெஞ்சூர்
பொருகிரண வேலுடைப் பரமன் முருகேசனும்
புகர் முகத்தவனும் மதியும்
பொங்குளைப் பச்சைப்பசும் பரவியேழ்கட்டு
பொற்றடந் தேரிரவியும்
பெருவாச லிற்புக நெருக்குண்டு
சந்நிதிப் பேறுண்டு கிட்டுமென்றே
பிறங்குபொற் கருடக் கொடிக்கம்பம்
வலம்வந்து பெருக வஞ்சலிசெய்திடத்
திருமேனி மண்டபத் தரசிருக்கும் கடவுள்
சிறு தே ருருட்டியருளே
தென் திருப்பேரை வருநங் குழைக்காதமுகில்
சிறுதே ருருட்டியருளே. 5

தந்தா னெனக்கு வரமிரண்டுந்
    தலைநாளுரைத்த சொற்படிக்குன்
தகப்பன் புரந் முறை தருமந்
    தழைப்பவொரு கோலோச்சியெங்கும்
நந்தா வளமைப் பரதனிந்
    நாடாளுவன் நீகாடாள
நடவென்று ரைத்த சிற்றவைசொல்
    நலமேற்றலைக் கொண்டொருபட்டுக்
கொந்தார் குழவி சனகியொடுங்
    கூடப்பிறந்த இளவலொடுங்
கொதிக்கும் பரல்வெங் கொடுங்கானம்
    குறுகும்போழுது குளிர்ந்தலர்ந்த
செத்தா மரைப்போற் றிருமுகத்துச்
    செல்வா தடந்தேருருட்டுகவே
தென் பேரையில் நங்குலநாதன்
    செம்பொற்றடந் தேருருட்டுகவே. 6

மத்தா லடிப்பு வுரல்மிதித்து
    மலர்த்தாள் குந்திட் டுறியில்வெண்ணை
வாரிக் களவிலுண்ட கனிவாயா
    பரமபதந் தனக்கோர்
வித்தாகவும் வந்தங் குரிக்கும்
    வேதப்பொருளே யருட்கடலே
விரைநாறிய பூம்பசுந் துளவ
    மெய்யாவொரு வெங்கரி மருப்பும்
முத்தோ டகிலும் செம்மணியும்
    முரித்திரைப்பாய் சுருட்டிமிக
முழக்குங் கூடுபுனல் துறையா
    முதுவாளரக்கன் தலைகள்பத்தும்
கொத்தோடற வஞ்சுறு வாளிகொடுக்குங்
    புயல் தேருருட்டுகவே
கொழிக்குந் தமிழ்த் தென்ருப்பேரைக்
    கோவே தடந்தேருருட்டுகவே. 7

புழைத்திண் திறற்கைம் மதசலதி
　　பொழியும்பிரைக் சிம்புரிக்கோட்டுப்
புகர்மா விடங்கர்க் குடைந்து வெரீஇப்
　　புதுபூங் கேணித் தடம்புனல்நின்
றழைக்கும் புயலே நெட்டரவின்
　　ஆடுங்குழகா ஒருநாளும்
அழியாப் பரமபதம் தந்தியார்க்கு
　　அருள்சீதர மாதவ முகுந்தா
மழைக் கொந்தளகக் குரும்பைமுலை
　　மதிவாணுதல் சானகிபொருட்டு
மதிள் சூழிலங்கை யரக்கன்
　　மணிமகுடஞ் சிதறக்கோதண்டம்
குழைக்குந் தடக்கை ரகுராமா
　　கொடிஞ்சித் தடந்தேருருட்டுகவே
கொழிக்குந் தமிழ்த் தென்திருப்பேரைக்
　　கோவே தடந்தேருருட்டுகமே. 8

வாலப்பிறை வாணுதல் மடவரர்
　　மலர்க்கைவளை கீழ்விழத்தொழுவோர்
மாறாப் பிறவி வேரொடற
　　வானத்தமரர் களிகூரச்
சாலப்பெரு வாளசுரர் படத்
　　தருமாகதர்கள் கொண்டாடத்
தருமந் தழைப்பக் கனகவிதைத்
　　தமிழ்நாவலர் ஈடேற
ஏலக் குழல் சானகி கழுத்தினிடு
　　மங்கலநாண் வாழ்வேற
எக்காலமும் நூற்றெண்மர் குழாம்
　　இதயத்திருந்து மகிழ்கூர்ந்து
கோலத் தெருவில் விளையாடிக்
　　கொடிஞ்சித் தடந்தேருருட்டுகவே
கொழிக்குந் தமிழ்த் தென்திருப்பேரைக்
　　கோவே தடந்தேருருட்டுகவே 9

மருவார் நறுமென் மலர்கொணர்ந்து
வழிபட்டிரு சேவடி சொரிந்து
மயங்கும் புனல்களைந்து மொன்றாய்
வருணன் செயும் பூசனையுவந்த
திருமா முகிலே தமிழ்க்குருகுஞ்
செல்வக் குழகா பாட்டாய்ந்து
சிறைவண் டலம்பிக் கண்படுக்கும்
செழுந்தார்த் துளவப் புயமுகுந்தா
அருநான்மறை நூற்றெண்மரும் வந்து
அங்கீகரித்து வடம்பிடிப்ப
அம்போருகப் பூந்திருவு முந்நீர்
அவனித்திருவு மருங்கிருப்பக்
குறுமாமணிப் பொன்மறுகி னெடுங்
கொடிஞ்சித் தடந்தேருருட்டுகவே
கொழிக்குந் தமிழ்த் தென்திருப்பேரைக்
கோவே தடந்தேருருட்டுகவே. 10

முற்றும்.

ஸ்ரீ

# மகரநெடுங் குழைக்காதர் பிள்ளைத்தமிழ்

## குறிப்புரை

1. **காப்புப் பருவம் :** பொற்பு - அழகு; முத்திரை- ஞான முத்திரை; திருவாய் மொழி நாலாயிரம் செய்த - ஆழ்வார் கூறிய திருவாய் மொழி ஆயிரமேயானாலும், நாலாயிரமும் அவர் அருளால் வெளிவந்தமையின் இங்கு உபசாரமாகக் கூறப்பெற்றது; நூற்றெண்மர் - இவ்வூரில் குடியேறிய நூற்றெட்டுக் குடும்பத்தினர்; வருணன் ...... - புண்ய தீர்த்தங்களைக் கொணர்ந்து வருணன் பெரு மாளை ஆராதித்ததாக இவ்வூர்த் தலபுராணம் கூறியதைக் குறித்தது; வானப்பிரான் - திருவாய்மொழி இவ்வூர்ப் பதிகத்தில் நம்மாழ்வார் பெருமாளைக் குறிக்கும் பெயர் களில் ஒன்று

2. உழக்கி - கலக்கி; பொலன்தாது - பொன்னிற மக ரந்தம்; ஆலித்து - ஒலித்து; துதைந்து - நெருக்கி; அளி- வண்டு; நறவு - தேன்; கூட்டுண்ண - கவர்ந்துண்ண; முகை - அருப்பு; ஓதிமம் - அன்னம்; வெண்ணிறப்பெண் - சரசுவதி; பரிபுரம் - சிலம்பு, மகரக்குழைக் கடவுள் - மகர நெடுங்குழைக்காதர்.

3, பின்னை மடமகன் - நப்பின்னைப் பிராட்டி; திருப்பல்லாண்டு ஓதினேன்- பெரியாழ்வார்; ஐந்து பேருக் கும் ஒரு தேவி - ஸ்ரீவில்லிபுத்தூர, திருமாலிருஞ்சோலை, திருவரங்கம், திருவேங்கடம், வடமதுரை இவ்வைந்தூர்ப் பெருமாளைக் காதலித்தவள்; அகடு - வயிறு; தமனியம் - பொன்; பொன் - அழகு.

4. மௌலி -முடி; "வேல்விழியில் நீர்த்தாரை பாய" என்று கூட்டுக. தம்பிக்கு – சுக்கிரீவனுக்கு; குழகன் - அழகன்; பெம்மான் - பெருமான்; பேதைமை - என் அறி யாமையால்; பிள்ளைத்தமிழில் ஏற்பட்ட குறைகள்.

5. ஆரணப் பொருள் நான்கும் - நான்கு வேதப் பொருள்களும்; யோகம் எட்டு- அஷ்டாங்க யோகம்; நூல் ஐந்தொடைந்தெட்டு - பதினெட்டு ரகசியங்கள்; நியமம்

ஆறு – வேதத்தின் ஆறங்கங்கள்; சித்தி எட்டு - அட்டமா சித்தி; கருணைகரக் குரிசில் - அருளுக்கு உறைவிடமாகச் சிறந்து நின்றவன்; கரா - முதலை; வாரணப் பகடு - ஆண் யானை; மை - கறுப்பு.

6. பிரசம்- தேன்; கலுழி -நீர்ப்பெருக்கு; தேக்கெதியும் -நிறையும்; பொலன்தாது - பொன்னிறமான மகரந்தம்› பம்பி - எழுந்து; கடவுள் - கடவுளுக்கு; மயிலையர்கோன் - பேயாழ்வார்; புயலை - மேகம் போன்றவனை.

7. கொந்து - கொத்து; தொடையல் - மாலை; கைபுனைந்து – அலங்கரித்து; நந்தா - கெடாத; அதிர் வளை - முழங்குகிற சங்கு.

8. வள்ள வாய் - மலரினது கிண்ணம் போன்றவாய்; தேறல் - தேன்; மலர் மங்கை திகழ் வஞ்சி - மகாலட்சு மிக்கு இருப்பிடமான மலையாள தேசம்; புள் அவாவுறும் நீலமாலிகை - வண்டுகள் விரும்பும் நீலப்பூக்களாலாகிய மாலை; புய பூதரன் - மலைபோன்ற புயங்களையுடைய வள்; சிலை - வில்லாகிய கொடி; வடவரை - இமயமலே; அள்ளல் - சேறு; சுரிசங்கம் - வளைந்துள்ள சங்கு; அகடு- வயிறு; நிலவு கால - நிலவைக் கக்க; கள்ளறா – தேன் நீங்காத.

9. வாள் - ஒளி; அரா அரசு - ஆதிசேடன்; ஆயிர நாக்குடையவன் - கல்வியிற் சிறந்தவனென்பது புராணம்; மீனவன் - பாண்டியன் வகிடப தேவன்; மதுரை மூதூர் என்று கூட்டுக. வேழப்பிடர் - யானையின் கழுத்து; வாழி பாடும் - திருப்பல்லாண்டு பாடும்; சரண பங்கேருகத்துகள் - தாமரை போன்ற கழற்கால் பொடி; கொண்டல் -மேகம் போன்றவன்; பகட்டு - ஒளி; கெழுதகைய - உரிமை யுடைய.

10. காவிரி நீர் படியும் அரங்கர்-திருவரங்கப்பெருமான்; சொல் மாலை - திருமாலை என்னும் பிரபந்தம் ; படிந் தடியில் - அடியிற் பணிந்து; துளவத் தொடை முடிசூடி - பூமாலை கட்டிச் சாத்தனார் தொண்டரடிப் பொடியாழ் வார்; குண்டால் உத்தி - ஆழமான கடல்; புனல் குமுழ-

கடல் வழிவிடாமையால் இராமன் அக்கினி அத்திரம் கொடுத்தமை.

11. அருமணிக் கண்மலர் படைத்து - கண்ணாரக் கண்டு; அமலனாதிப் பொருள் - "அமலனாதிபிரான்" என்ற பிரபந்தம்; நச்சி - மணஞ் செய்ய விரும்பி; சிலை வளைக்கும் - சனகன் கொடுத்த வில்லை நாணேற்றிய.

12. அரும்பொருள் - திருமால்; நற்பொருள் - திரு மந்திர உபதேசம்; பறிமுதல் - கொள்ளையடித்த பொருள் அளை - வெண்ணெய்.

13. பாடலாயிரம் - " திருவாய்மொழி " என்னும் பிரபந்தம்; மாறனுரை செய்தருளவே - நம்மாழ்வார் சொல்லிக்கொண்டுவர; பட்டோலை எழுதும் - ஓலை யிலே எழுதிக் கொள்கின்ற, ஒருமுகம் - ஒருங்கே, கூடு பொருனைத்துறை - தென்திருப்பேரை திருமஞ்சனத் துறை; கண்படுக்கும் - தங்கித் துயில்கொள்ளும், வானப் பிரான் - மூர்த்தியின் பெயர்

14. திருஞான முந்திரைக் கடவுள் - நம்மாழ்வார், பிரவுடவாக்கி - முதிர்ச்யடைந்த சொல்திறமுடையவன், சரோருகம் - தாமரை, கருணாகரன் - அருளுக்கு உறை விடமானவன், பரசமய திமராரி - புறச்சமயங்களாலாகிற இருளுக்கு பகைவன், பூதூரன் - இராமாநுஜர் குலநாதன் -இந்நூலாசிரியர் குழைக்காதப் பெருமானுடன் கூடவந்த நூற்றெண்மருள் ஒருவராதலால் குலநாதனென்கிறார், திருவாய்மொழி தனக் குரைவிரித்தெழுது -என்றது திருக் குருகைப் பிரான் பிள்ளான் பேரருளால் ஆருயிரப்படி வியாக்கியானம் செய்தாரென்ற கருத்தை உட் கொண்டது.

2. **செங்கீரைப் பருவம்:** பொற்பதுமப் பெரகுட்டு ஆசனம் எனக் கூட்டுக; பொகுட்டு - கொட்டை, மறைக் கிழவன் - பிரமன். சடைமுடிக் கடவுள் - சிவன், குலிச வச்சிராயுதம் - ஒருபொருட்பன்மொழி, வக்சிராயுதக் கடவுள் - இந்திரன். தெரியல் - மாலை, குமரன் - முருகன், புகர் முகத்தவன் - விநாயகன், புகர்முகம் -

யானை, சேவிப்ப - தொழ, சேவைபுரி - காட்சியளித்கின்ற, தேன் நாறு - தேன் மணக்கின்ற, திருப்பேரை - பூமிதேவியின் அம்சமான வடக்கு நாச்சியார்.

2. குரம்பு - அணைக்கட்டு

4, குதம் பை - காதணி.

5. படீரம் - உயரம், சடிலேசர் - சடையையுடைய சிவன், வாமம் - இடதுபுறம், குழைக்காத நாயகி - தெற்கு நாச்சியார்.

6. மிலைச்சு - அணிந்த, சூழியம் -கொண்டையணி, தொய்ய - வருந்த, பண்டி - வயிறு,

8. ஒத்திகை - செய்யப் பழகுதல், அடிகுந்தி - கால் நுனியில் நின்று.

9. துந்துபி - ஒருவகை வாத்தியம்.

3. **தாலப் பருவம்** : கயம் - ஆழம்,

2. புயசயிலம் - தோளாகிய மலை, தமரப் - ஓசை, கமஞ்சூல் - நிறைந்த கருப்பம்.

3. அர மகளிர் - தேவ ஸ்திரீகள், பேராயம் - பெருங்கூட்டம், மருங்குற்கு - இடைக்கு, குளிகை முகட்டின் - உச்சியில், கான்று - கக்கி, துணர் - பூங்கொதது, சுரபி - காமதேனு.

4. தறுகண் - அஞ்சாமை, கோ - பெருமை, புகர் - புள்ளி, சிம்புரி - கொம்பில் அணிந்த பூண், சுவற்றி - வற்ற வைத்து, முடிக்கும் - தலைக்கும், முடிக்கும் -சூடும்

5. கணிக்கும் - ஆராயும், உவட்டெறியும் -நிறைந்து வெளிே தள்ளும், பங்கேருகம் - தாமரை, சரணம் - அடி.

6. படப்பரந்தள் - படத்தையுடைய பாம்பு, பாட்டயர்ந்து - இனிய ஒலி செய்து, கண் படுக்கும் - துயிலும், சிகரப் புயபூதரம் - உயர்ந்த தோளாகிய மலை.

7. அல்லி அகவிழ், மல்லல் - வளம், பணிலம் - சங்கு, வாய்மடை - தண்ணீர் வெளியே வருகிற மடை.

8. ஆழிப்புயலே - சக்கரப் படையைத் தரித்த மேகம் போன்றவனே, பணாமகுடம் - படங்களையுடைய தலை, கணிகணன் - திருமழிசையாழ்வார் சீடன்.

9. கற்றா நிரை - கன்றையுடைய பசுக்கூட்டம், திருக்கு பேதமை - மாறுபாடு, சமராடிடும் - போர் செய்யும், திகிரி - சக்கரம்.

10. விசித்திறுக்கி - இறுக்கிக்கட்டி, குடவால்வயை - குடம் போலும் வெண்மையான சங்கு.

4. ***சப்பாணி பருவம்***

1. அரமகளிர் - தேவமாதர், அடி - வேர், பகடு - யானை, புக்கிடாமல் - புகுந்துவிடாமல், வடிகெகண்ட- வடித்தெடுக்கப்பட்ட, கனல் கொளுந்த - தீப்பற்றி யெரிய, இந்திர செயித்து - இந்திரசித்து, கடை குழைக்கும்.

2. வரிவண்டு - ஒலிக்கின்ற கோகெளையுடைய வண்டு, அடைகிடந்த - அடைகாத்துக்கிடந்த

3. பின்னை - சத்தியபாமை, பின்னைமேல் ஏற்றிக் கூறியது உபசார வழக்கு.

4. கை - ஒழுங்கு, சத்தியபாமைக்காகப் பாரிசாதம் கொண்டு வந்தபொழுது தேவலோகத்தில் அதைக் காத்துப் போரிட்ட இந்திரன், சிவபிரான் முதலான தேவர்கள் தோற்றோட வென்று அதைத் தன்னுடைய ஊருக்குக் கொண்டு வந்தான் கண்ணன் என்ற கதை குறிப்பிடப் படுகிறது. தடந்தாரு - பெரிய மரமான பாரி சாதம், புரந்தான் - தன்னுடைய ஊருக்கே.

5. மகரஜலராசி - மீனையுடைய கடல், அகிலம் - உலகம், அங்காந்து - திறந்து, இடங்கர்க்கு முதலேக்கு.

6. சீரை - மரவுரி, மரலிகாபரணன் - மாலையணிந் தவன், உவட்டெடுத்து - நிறைந்து வழிந்து.

7. உபயசரணாரவிந்தத்து - இரண்டு அடித்தாமரை களிலும், எடுக்கும் - பறித்துக் கொண்டு வந்த, அறுகால்

- வண்டு, திருத்துழாய் படலை மலருந் தழையும் சேர்த்துக் கட்டிய மாலை, சித்திரவட்டாழி -அழகிய வட்டமான தேர்ச் சக்கரம், பொலன் புரிசை - பொன் மதில்.

8. சுடிகை நாற்றி - நெற்றிச் சுட்டியைத் தொங்க விட்டு.

9. தொக்கில் - புற்றில்லாத.

10. பவுரி - ஒருவகைக் கூத்து, மிருகமதம் - மான் மதம் - கஸ்தூரி, பானிதம் - குழம்பு.

5. **முத்தப் பருவம் :**

1. வேதங்கள் தங்குவதாலும், சங்கை வைத்து ஊது கையாலும், திருமகளின் இதழமுதம் துளிக்குமென்று இன்பமடைதலாலும், வாய்மை குடிகொண்டிருத்தலாலும் நீ வாய் முத்தம் கொடு என்று பொருள் கொள்க. சிவனுக்கும் அயனுக்கும் பிரத்தியட்சம் என்பது தலமான்மியம்.

2. பூகம் - பாக்குமரம், தாறு - குலை, வாழையுழை முத்து - வாழையிடத்துள்ள முத்து, செவ்வு - முத்துக்கனின் நிறையளவு. எத்தனையோ முத்தங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் குற்றம் இருக்கிறது. ஒன்றும் ஈடில்லாத உன் வாய் முத்தம் கொடு என்கிறார்.

4. உவரி - கடல்; பங்கம் - சேறு.

6. பம்பு - நெருங்குகின்ற; வடிவம்பு - ஓரம்; ககன முகடுகோத்து - ஆகாயத் துச்சியில் நெருங்கி, தம்பம் - மற்றுக் கோடு, கவிர் - பவளம்.

8. அங்குரித்து - முளைத்து, கோவா - கோக்காது, தரியார் - அடியார்.

19. சந்தாடவி - சந்தன மரக்காடு; நந்தா - குறையாத.

6. **வாரானைப் பருவம் :**

1. வாரானை - வருகை; விரதன் - கொள்கையாக யுடையவன், விதரணன், விதரணிகம் - சாமர்த்தியம்.

2. கதுவும் - பற்றும்; நிருதர் - அரக்கர்; சமர் - போர், இகல் - பகை; முகலளித விதரணமுளோன் -முக அழகும் சாமர்த்தியமும் உள்ளவன்; உபயபரிபுர சரணம்- இருகழல்களையணிந்த திருவடிகள்; நிகரில் முகில் வண்ணன் - மூர்த்தியின் திருநாமம்.

3. உத்தி - கடல்; திருமணந்து ஒளிர் மருமம - லக்ஷ்மி தங்கி ஒளிவிடும் மார்பையுடையவனே; தகரம் - மயிற் சாந்து, சரிவிடும் - அழிக்கும்; அடிமம - விருப்பத்திற்கு உரியவனே.

4. கவின் - அழகு; சமன் - யமன்; மஞ்சரி-கொத்து நறா - தேன்.

5. அளை - தயிர்; வால்வளை - வெண்சங்கு; நங்கை கண்மணி – உடைய நங்கையார் குமாரர் நம்மாழ்வார்.

6. சூழியம் - தலையில் அணியும் நகைகள்; மூரிக் கடல் - வலிமையான கடல், இடைகழி - இரேழி.

7. பணா மகுடம் – படத்தின் உச்சி, பாந்தன் - பாம்பு, வானுதல் - சத்தியபாமை, தரு - பாரிசாதமரம்,

8. நந்தாவிளக்கு - வாடாவிளக்கு, எழுதாமறை - வேதம், தாமம் - மாலை, கூடுபுனல் - திருமஞ்சனத் துறை.

9. இலவு இதழ் - இலவுமலர் போன்ற செவ்விதழ், மருங்கு - இடை, நுதல் தீட்டு - நெற்றியில் இட்ட குறி.

10. கரதலம் - கையிடம், கன்னி - இலக்குமி.

7. அம்புலிப் பருவம் :

1. மதியுடைத்தாய் - மதியென்னும் பெயரையுடைத் தாய், அறிவுடைத்தாய்; மண்டலம் பெற்று - வட்ட வடிவம் பெற்று; மகராலயம் - கடல்; நதி - கங்கை; அருகு - அருகம் புல்; எருக்கு - வெள்ளெருக்கு; சடைக் காட்டு நம்பன் - சடையை மிகுதியாக உடைய சிவபெருமான்; பவளக்குலைச்சாலி - செந்நெல்; மூடூடம் செடி, வாய்மடை - நீர் பாயும் மதகு; பகட்டு - ஒளி, வெடி தாவி - துள்ளித் தாவி.

2. செனனவலை - பிறப்பு வலை; சமுகதீர்த்தத் துறை - கூடுபுனல் துறை; முயல் கறை - சந்திரனில் தோன்றும் களங்கம்; சிதைந்து - போக்கி; அடைகிடப்ப - நெருங்கியிருப்ப; முருகு - தேன்.

3. அணல் - மேல்வாய்ப்புறம்; மிச்சில் - எச்சில்; குப்புற்று - தலைகவிழ்ந்து; உவணன் - கருடன்; எட்டிரட்டித்த - பதினாறு.

4. சுடிகை - உச்சி ; விமலை - லக்ஷ்மி.

6. சந்திரனுக்கும், மகரநெடுங்குழைக்காதருக்கும் சிலேடை,

சந்திரனைச் சொல்லுமிடத்தில், துவிதியையென்னும் திதியையுடையவன், சுருங்குகிற கலைகளையுடையவன், உருவமில்லாத மன்மதனுக்குக் குடையாக உள்ளவன்; ஆகாயத்தில் மறைந்தே ஒளி குறைந்திடுவான். ஒடித்திரிந்து இளைத்துப் போவான், உப்புக் கடலின் சேற்றிடையே தோன்றுவான் எனவும்; மகரக்குழையனைச் சொல்லுமிடத்து, அரிய தோத்திரங்களையுடையவன், கலைகள் நிரம்பப் பெற்று குறையாமல் இருப்பவன், திறமையான அறிவுடையவன், வேதப் பொருளின் ஒளியாக விளங்குபவன், ஒரு நாளும் களைப்படையாதவன், மேலேயுள்ள பாற்கடலில் தோன்றுவான் எனவும் பொருள் கொள்க. ஆறலை புரட்டும் - ஆற்றில் அலைகளைப் புரளச் செய்கின்றன.

7. சந்தம் - சந்தனம், படாம் - மேலாடை, பரிபவம் - அவமானம். அந்தக் கணக்கு - அதே நிலைமை.

8. பன்னி - பத்தினி, புரை - குறை, கைம்மலைக் கோட்டவன் - யானைக் கொம்பு உடையவன், விநாயகன்

9. நள்ளிடை - இருளிலே, சலஞ்சலம் - வலம்புரிச் சங்கு.

10. பேயியல்லா - உவமையில்லாத, இவன் போலியன்று - இவனைப் போன்றனில்லை; படுகர் - நீர் நிலை, புளினம் - மணல் மேடு, சூடு - கொண்டை.

8. *சிற்றிற் பருவம் :*

1. சுரும்பர் - வண்டு; துதைந்து - நெருங்கி, சில்லோசை - சில்லென்ற ஓசை, ஊற்றிருப்ப-பெருக்கெடுப்ப, மிழற்று தொறும் - ஒலிக்குந் தோறும்; கலுழி நறவு - வெள்ளமாகிய தேன்; வண்டல் - விளையாட்டு.

2. பொலன் தாளா - அழகிய திருவடிகளையுடையவனே.

3. வள்ளைக் குழை - வள்ளைத் தண்டு போன்ற காதில் அணிந்த குழை; கோமளம் - இளமை, வனம் - அழகு, மீதூர்ந்து - பொங்கி, பரல் தள்ளி - கற்களைத் தள்ளி, மாற்றரும் - எத்தனை மாற்று என்றறியாத,

4. அவ்விருக்கு - பிரசித்தி பெற்ற வேதம், மென் மலர் - பாரிஜாத மலர்.

5. கோவா - கோர்க்கப்படாத, தொங்கல் மாலை, குவவு - திரட்சி, காயாவாம் பூவே - காயாம் பூப்போன்ற நிறத்தையுடையவனே, உவட்டெறிந்து - பெருக்கு மிகுந்து, நித்தில வெண்மலர் - முத்துப்போன்ற வெள்ளிய மணல்.

6. அளை - தயிர், மோர், வெண்ணெய்; உகண்டு - உகள் என்ற பகுதியாகப் பிறந்த வினையெச்சம்.

7. கண்ணேறு - திருஷ்டி தோஷம்; காவல் கடவுள்- எல்லாவுயிரையுங் காக்கும் உனக்கு திருஷ்டி தோஷம் எப்படி வரும் ? எங்களையும் காக்க வேண்டாமா ? சுவறி - வற்றி.

8. தடித்து, மலைச்சிகரம் போன்று உடையால் மூடப்பெற்ற முலை என்று பொருள் காண்க.

10. வேதிகை - திண்ணை; வன்பு - மலிமை.

9. *சிறுபறைப் பருவம் :*

1. கைம்மலை - யானை, திசாமுக பாலர் - திக்குப் பாலகர், கமழ்நாறு - மணம் வீசும், பூகம் - கமுகு, விரசம்- தேன்.

2. புனித பூரணன் - தூய்மை நிறைந்தவன், இரட்டும் - முடிக்கும், துடி - உடுக்கை, திண்டிமம் - புலவர் வருகையைத் தெரிவிக்கும் முரசு, நியமஞ் செபும்- கடமைகளைச் செய்யும், விருதரசர் - வெற்றிப்பட்டங் களைப் பெற்ற அரசர், மணி வாசல் – மணிகட்டிய வாசல் விதரணக் கொடை - திறமறிந்து கொடை, மும்முரசு - கொடை, வெற்றி, மணம் இவற்றை அறிவிக்கும் மூன்று வகை முரசுகள், விசித்திருக்கி - கட்டியிறுக்கி, தொண்டகம் - குறிஞ்சி நிலப்பறை, சதிமுறை - தாலி ஒத்து முறை.

3. அண்ட கோலிகை முகடு - வானவுருண்டையின் உச்சி; கைகளிருபதும், கால்களும் தொடர்ந்து விழுவது போல மண்ணில் வீழ்ந்து; நிலத்தை நோக்கித் தலை கவிழ்ந்து நிற்கும் நிலை; நள்ளிடை - இரவில்; நளினம்- தாமரை; நாகிளப் பேடை - மிகுந்த இளமையுடைய பெண் வண்டு; கண்படுக்கும் - துயிலும்; வாளொரீஇ - வாளும் நீங்கி.

4. அண்டம் - இவ்வுலகம்; பகிரண்டம் வெளியுல கம்; அழிவுட்கடாம் - கன்னத்திலிருந்து பெருகும் மதலம்; கம்பக்களிறு - நடுக்கத்தைச் செய்யும் யானை; அடிச் சுவடு எடுத்திடாமல் - தடத்தை விட்டுக் கால்களையெடுத் திடாமல்; வடவைக்கனல் - பெண்குதிரை முகத்தின் வடி வத்தோடு கடலில் ஒளிந்திருந்து ஊழியினிறுதியில் மேலெழுந்து உலகத்தை யழிக்கும் கொடுந் தீ; கோலிரா - வலிமையுடைய ஆதிசேடன்; ஆமை - அண்டத்தைத் தாங்கும் ஆமை; முகடு வெடியா - உச்சி வெடியாமல்.

6. புவனத் திருமாது - பூமிதேவி; கொற்றக் குலமாது - ஜயலட்சுமி; கோமளமாமாது - புகழ் என்னும் லட்சுமி; சததள மண்டபம் - நூற்றிதழ்த் தாமரை; பூமாது - இலக்குமி; நாமாது - கலைமகள்.

7. அண்டகடாசய் - அண்ட கோளத்தின் சுவர்; முடவு - வளைந்த உடலையுடைய.

10. கவந்தம் - உடற்குறை; தாறு - குலை.

10. ***சிறுதேர்ப் பருவம் :***

1. சமராடிடும் - போர் புரியும்; கிம்புரி மருப்பும் - பூண்கட்டிய தந்தமும்; நித்திலம் - முத்து.

2. குழாம் வெல்லும் - கூட்டத்தை ஜயிக்கும்; கடல் முகட்டின்பால் என்றும் ஓடிபட என்றும் கூட்டுக.

3. மருவார் பொழில் - மணம் நிறைந்த சோலை; வாய் மடையில் எனக் கூட்டுக. வளை முத்துயிர்க்கும் - சங்கு முத்துக்களை ஈனும்.

4. வன்பால் விடுத்து - கொடுமை நீக்கி; நள்ளிடை - இரவிலே; ததியார் - அடியார்; பொன்பால் - இலக்குமியிடத்து; புவனத்திரு - பூமிதேவிக்கு; பூலோகத்துத் தென்பால் - பூமியில் தெற்குத்திசைக்கு மகாலட்சுமிக்குப் பொட்டோ, பூதேவியின் பொட்டோ, தென்னாட்டின் பொட்டோ எனப் புகழ் பெற்ற பேரை எனக் கூட்டுக.

5. தரு - கற்பக விருட்சம்; புரந்தரன் - இந்திரன்; சூர் - சூரபதுமன்; புகர் முகத்தவன் - யானை முகத்து விநாயகன்; கருடக் கொடிக்கம்பம் - கொடிமரம்; சந்நிதிப் பேறு - சந்நிதியை அடைந்து பெருமாளைச் சேவித்தல்; கிட்டும் - பின்னராவது கிட்டும்; திருமேனி மண்டபம் - பெருமாள் எழுந்தருளியிருக்கும் உள் மண்டபம்.

6. நந்தா வளமை இந்த நாடு - குறையாத வளத்தையுடைய இந்தக் கோசல நாடு; சிற்றவை - சிறிய தாய் கைகேயி; செல் நலமே தலைக்கொண் - வார்த்தை நன்மையே தரும் என்று ஏற்றுக் கொண்டு; ஒருப்பட்டு – சம்மதித்து; காட்டுக்கும் போகும் பொழுதும் முகமலர்ந்து மகிழ்ச்சியோடு இருந்த இராமா என்று பொருள்.

7. மத்தாலடிப்ப - காரியம் பொருளில் வந்தது; மலர்த்தாள் குத்திட்டு - அடிக்காலை உயர்த்தி, நுனிக் காலில் நின்று,; அங்குரிக்கும் - தோன்றும்; விரை நாறிய - மணம் வீசின; மெய்யா - உடலையுடையவனே; செம் மணி - மாணிக்கம்; மூரித்திரைப் பாய் சுருட்டி - பெரிய அலைகளாகிற பாயிற் சுருட்டிபெடுத்து; அஞ்சுறு - அச்சத்தைத் தருகின்ற.

8. மதசலதி - மத நீராகிய கடல், புகர்மா - புள்ளிகளையுடைய யானை, இடங்கர் - முதலை, வெரீஇ - வெருவி, பயந்து, நெட்டரவின் - காளியன் முடிமேல், கொடிஞ்சி - தேர்த்தட்டு,

9. வாலப்பிறை - இளம் பிறை, மாசதர்கள் -துதி பாடகர், கோலத்தெரு - அழகு நிறைந்த தெரு.

10. மயங்கும் புலன்களைந்தும் ஒன்றாய் - ஒருமை மனத்துடன், பாட்டயர்ந்து - பாட்டுப்பாடி, அம்போருகப் பூந்தி - தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி, முந்நீர் அவனி - கடல் சூழ்ந்த பூமி, அவனித்திரு - பூதேவி.

பிற்கூற்று :

1. முத்தி பெற்றோரு மீளவரும் பேரை - பரம பதத்தினும் இன்பம் தரும் தென்திருப்பேரை. கூ முற -விருப்பத்துடன்.

2, கோகனகம் - தாமரை, சேனேசன் - சேனை முதலியார், செண்பகச் சடகோபன் - இராமானுஜன், எஞ்சலில் - குறையாத, நலம் பொறை திருந்து - நற்குணம், பொறுமை இவற்றிற் சிறந்த, வள்ளல் - குழைக்காதன், உவகை பொங்கு - மிக்க மகிழ்ச்சியைச் செய்கின்ற, நல்லின்ப மெய்கவி - உண்மையாகவே எல்லோர்க்கும் இன்பம் தருகின்ற , கவி - பிரபந்தம்.

முற்றும்.

# குழைக்காதர் சந்தானப்பத்து

மக்கட் பேறு இல்லாதவர்கள் தினந்தோறும் நீராடிய பிறகு குழைக்காதரை மனத்தில் கொண்டு ஏகாக்ர சித்தத்துடன் ஸ்ரீராமையங்கார் அருளிய இந்த பதின்மூன்று செய்யுட்களைப் பாராயணம் செய்தால் நன் மகவைக் பெற்று நல்வாழ்வு பெறுவர் என்பது அனுபவ பூர்வமாகக் கண்ட உண்மை.

1. சந்தான மூர்த்தி மகரக்
குழையர்தம் மேலடியேட்
சந்தானப் பத்துத் தமிழ்மாலை
மாடத் தயவருள்வாய்
சந்தான மாகுந் தமிழ்ப்பேரை
நங்கை தவத்துதித்த
சந்தான மாஞ்சட கோபா
மகிழ்மலர்த் தாமத்தனே.

2. செந்தார் மணிமகிழ் சேர்மணி
மார்பன் திருப்புயத்திற்
கொந்தாரும் பச்சைத் துழாயணி
கேசவ கொண்டல் வண்ண
பிந்தாமல் நான்வந்து பொன்னடி
போற்றப் பிரியமுடன்
சந்தானந் தாகுழைக் காதாதென்
பேரைத் தயாநிதியே.

3. முந்தித்த காலம் பொருநா
நதியினின் மூழ்கியுமே
வந்தவென் பாவம் தவிர்ந்ததிலே
நியதை மாற்றுகண்டாய்
உன்பதி யார்பதம் போற்றுந்
தமியன் உளமகிழச்
சந்ததி பாக்கியந் தந்தருள்
பேரைத் தயாநிதியே.

4. பாகார்ந்த செந்தமிழ் பாமாலை
பாடிய பாவலர்க்குப்
போகாத வல்வினை போக்குவித்
தாயிந்தப் பூதலத்தில்
வாகார் மகரக் குழையா
யடியன் மனமகிழச்
சாகாத சந்ததி தந்தருள்
பேரைத் தயாநிதியே.

5. கையார வாரி யெடுத்தனைத்
தேமுத்தங் காதலுடன்
பொய்யாமல் மைந்தன் அருள்புரி
வாயிந்தப் பூதலத்தில்
அய்யா மகரக் குழையா
அடிமைக் கிரங்கியிப்போ
மெய்யான சந்ததி தாருந்தென்
பேரையில் வித்தகனே.

6. கூர்க்காயு மாழிக் கரத்தா
யினியுன் குரைகழலே
யார்க்கார மாகத் தொழுமடி
யேனுக் கருள்புரிவாய்
நீர்க்கார மேனி யழகா
எனக் கின்று நிச்சயமாய்
தீர்க்காயு ளுள்ள மகன்தாதென்
பேரையில் ஸ்ரீதரனே.

7. அத்திர வேல்விழி மின்னார்கள்
தந்த விரகத்தினால்
தெத்திலும் தீவிழுந் தெரியாமல்
உன்தன் திருவுளத்தால்
பத்திர மாக அடியேன்
தனக்கோர் பலமிகுந்த
புத்திர சம்பத்தை ஈவாய்தென்
பேரையில் புண்ணியனே.

8. மீனம்பு நீர்விழி யனார்கள்
தந்த விரகத்தினால்
ஊனம் படுந்துயர் ஒன்றொழிப்
பாயுயர் வானறலே
வானம்பு பூமி வளர்பயிர்
போலுன் மலர்ப்பதத்தை
நான் நம்பி னேன்குழைக் காதாயி
னியுன்ற னடைக்கலமே.

9. நத்தூர நேமிக் கரத்தாய்
இனியுந்தன் நாமத்தைநான்
எத்தூரம் போயினும் நான்மற
வேனிடை மாதர்தனில்
முந்தூருங் கொங்கைய சோதைப்
பிராட்டி முகத்திலிட்ட
கத்தூரி நாமத் தழகாதென்
பேரையில் காதலனே.

10. மாந்திக் கிடக்கும் அடியே
னுடைய மனமகிழ
சாந்தி முனிக்கருள் செய்தது
போலத் தயவுசெய்து
ஏந்தி மதிக்க விளையாடப்
பிள்ளை எனக்கருள்வாய்
காந்தி மதிக்கு நிகரா
கியமுகக் காகுத்தனே.

11. ஒருமைந் தனுக்கு வரம்வேண்டிப்
பெற்ற உடையநங்கைக்
கருமைந்த னாகி யவதரித்
தாயய்யன் ராமனுக்கு
திருமைந் தனாகிய ஸ்ரீராமன்
செல்வக் குடிதழைக்கக்
கருமைந்தன் தந்தருள் பேரை
வகுள திவாகரனே.

12. மாவுக்கு வாசஞ் திருமால்
உரையடி மாதர் மகிழ்
பாவுக்கு வாசமகிழ் மாறன்
செய்பாடல் பைந்துளவத்
தேவுக்கு வாச மடியார்கள்
சிந்தையில் சேர்ந்திருத்தும்
நாவுக்கு வாசம் புகழ்பேரை
வந்தருள் நாரணனே.

13. சந்தானப் பத்துந் தமிழ்மாலை
நூறுந் தரித்தவர்கள்
அந்தா ரணியில்நல் லாண்பிள்ளை
தான்பெற் றகமகிழ்ந்து
கொந்தார் துளவமணி மால்குழைக்
காதரைக் கும்பிட்டுடன்
மந்தாத வாழ்வும் பெறுவார்
அவரிந்த மாநிலத்தே.

— ஸ்ரீ ராமையங்கார்

**சந்தானப் பத்து :**

1. தாமம் — பூ மாலை
2. கொந்தார் — கொத்தான மாலைகள்
3. தமியன் — தனித்திருப்பவன், கதியற்றவன்
5. பூதலம் — பூமி
6. கூர் — கூர்மையான
7. விரகம் — பிரிவினால்
10. காகுத்தனே — இராமனே
12. துளவம் — துளசி; தேவக்கு — தெய்வத்திற்

ஸ்ரீ மகர நெடுங் குழைக்காதர் திருவடிகளே சரணம்.

# திருப்பேரை நாச்சியார் சோபனம்

1. தேனே தெள் அமுதே நீ வாராய் - எந்தன்
சிந்தை மகிழ்ந்து பாடலைக் கேளாய்
சிரத்தையுடன் திருப்பேரை
நாயகியாள் சோபனத்தைப்
பாடாய் அருள் தேடாய்.

2. பதின்மர் ஆழ்வார்கள் பதம் போற்றி - நிதம்
பக்தியாம் நூற்றெண்மர் பதம் போற்றி
இளையவல்லி ஸ்ரீநிவாஸ ஸ்வாமி மலர்
வாழ்த்தி துதி சாத்தி. [பாதத்தை

3, சதுர் முகன் தேவியரே தாயே - எந்தன்
சரஸ்வதியே வருவாயே
பேதை நான் எடுத்துரைக்கும்
பாடலை மகிழ்ந்து நீரும்
வாரும் அருள் தாரும்.

## 2-வது கட்டம்

1. சீர் மகிழ் பேரையில்
வாழும் குழைக்காதர்க்குச்
சிந்தை பொருந்திய பக்தராம்
சீல குணமுள்ள ராமச்சந்திர அய்யங்கார்
ஜகத்தினில் யாவர்க்கும் மித்திரராம்

2. தர்ம நீதிகளைத் தவருதவராம்
சத்திய அந்தணராய்
சகலரிடத்திலும் தயாளுவாய் இருக்கும்
சத்வ குணமுள்ள மித்திரராம்

3. பேர் புகழ் பிரபலமாய்
தலைப் பட்டு எங்கும்
பெரியன் கூட்டம் என்று பெயர் பெற்று
ஜாமீன் இல்லாமலே தென் திருப்பேரையில்
தர்ம கர்த்தா ராகவே பார்த்து வந்தார்.

4. பரம புருஷருட வம்சத்தில் யாவரும்
பரம்பரையாய் தர்ம கர்த்தாவாம்
மன்னுயிர் யாவரையும்
தன்னுயிர் போல் பாவிக்கும்
நாராயண ஐயங்கார் தர்மகர்த்தாவாம்.

5. உத்தம தாஸருட புத்திரி ஆழ்வார்
பாடலைக் கேட்டு மனமிரங்கி
கஷ்டத்தை தீர்ந்து காத்து ரக்ஷித்து
எங்களை கருணைநிதியே ஆதரியும்.

## 3-வது கட்டம்

1. ஸ்ரீதேவியும் பூதேவியும் சேர்ந்து கூடினாள்
கூடு திரு புனலில் தவம் செய்ய நாடினாள்
மாதேவியும் நதி தனிலே
மகா தவங்கள் தான் புரிய
மகர நெடுங் குழைக்காதரை
மகிமையுடனே அடைய (ஸ்ரீ)

2. நீல மேக வர்ணனை மனம் நினைந்து வாடியே
நிச்சயமாய் இருந்து தவம் செய்ய நாடியே
நிர்மலமாக மனதை நிருத்தியுருதியுடைய
நித்யானந்தப்ரபுவை அவாள்
பர்த்தாவாகவே அடைய (ஸ்ரீ)

3. அஷ்டாக்ஷர மந்திரத்தை உச்சரித்துமே
அன்புடன் ஸ்ரீ ஹரியைக் காண இச்சை
கொண்டுமே
மங்கையவாள் இருவரும் சுவாமி
பங்ையத் தாளை எடுத்தாள்
மகிமையுடனே மகரக் குண்டலம்
மகத்துவமாய்க் கண்டெடுத்தாள்.

4. அற்புதமாம் குண்டலத்தின்
அழகைப் பாரடி - இதை
அணிய நாதர் எங்கிருந்து வரப்போரா ரடி
சிந்தித்தவாள் இருக்கையிலே
ஸ்ரீ கெருடன் தோளில் ஏறி

வடிந்த காதும் குழையுமாக
வந்துதித்தார் வர்களை நாடி (ஸ்ரீ)

5. குண்டலத்தைக் காதில் சாத்தி
குதூகலமாக
கூடியவாள் மணம் புரிந்தாள் மங்களமாக
ஸ்ரீ லெக்ஷிமி கேசர் என்று
ஜெகத்தில் எங்கும் பேர்பாதியாய்
தென் திருப்பேரையில் வந்து
வீற்றிருந்தார் அதிபதியாய் (ஸ்ரீ)

## 4-வது கட்டம்

1. மங்கை தவம் நிறைவேற்ற
மகர பூவுணர் கொண்ட
நியமனங்கள் என்னவென்று கூறுவோம்
கூறுவோம் துயர் தீருவோம்

2. நங்கையர்கள் தவத்துதித்த
மங்கைய மலர் பாதம் தன்னை
செங்கமலக் கண்ணனனைச் சேருவோம்
சேருவோம் மனம் தேறுவோம்.

3. ஏக ஜாதியாகவும் | பூர்வ சிகையாகவும்
இருக்கும் இடத்தை அவர் எண்ணியே
எண்ணியே தவங்கள் பண்ணியே.

4. சாம வேத ராகவும்
சர்வ விஷ்ணு பத்தராகவும்
சேர்ந்திருக்கும் இடத்தை அவர் நாடியே
நாடியே திருப்பேரையைத் தேடியே

5. ஊர்த்துவ குண்டலராகவும்
தாமிரபரணி தீரமாகவும்
உள்ள ஸ்தலத்தில் அவர் வந்தனர்
வந்தனர் சேர்வை தந்தனர் (மங்)

## 5-வது கட்டம்

1. மங்கையரே கூடி மகா பூஷணரை நாடி
பணிவோம் நாம் வாடி
மங்கயமலர் பாதம் தன்னை

2. செங்கையில் கதை, சக்கரம் ஏந்திய
சாரங்க பாணியின் சந்ததமும் நாம் (மங்)

3. நூதனமாய் சுந்தர பாண்டியன்
நூற்று எட்டு கிரகம் கட்ட
தானம் வாங்கத் தானுமொரு ஆளாய்
வந்து நின்றவரை

4. சந்ததமும் பிள்ளைக் குழாய்
விளையாட்டை உகந்து பார்க்க
சன்னதி கருடன் வேண்டாம்
என்றுரைத்த சர்க்குணர்க்கு (மங்)

## 6-வது கட்டம்

1. மகிழ்ந்து சேவிப்போம் வாடி
மகர பூஷணன் பாதத்தை (மகி) 2
புகழ்ந்து நாம் எல்லாரும்
பூரணமாகவே கூடி
பேராபுரி நாயகி, நாதன் மலர்ப்
பாதத்தை (மகி)

2. காலையில் கூடு புனலடி
கர்ம பாசன் தன்னை நீக்கி
நபடு புகழ் தென் பேரை நாதன் மலர்ப்
பாதத்தை (மகி)

3. காடு கரை தன்னில் சென்று
கடுந் தவங்கள் செய்ய வேண்டாம்
வர்ணன் தொழும் மலர்
மாயன் மலர்ப்பாதத்தை (மகி)

4. கலக மனம் தன்னை மாற்றி
பக்தி தன்னிலே நிறுத்தி
முக்தி மார்க்க மாகிய
மோக்ஷ சாம்ராஜ்ய மளிப்பார் (மகி)

5. பாத்திரமான அவர் சாஸ்திரம்
தன்னைப் பார்த்து
சூஸ்த்திர தாரி நாமத்தை
சொல்லி சொல்லி துதிக்க (மகி)

## 7-வது கட்டம்

சித்த தவம் பண்ணி திரு மகரப்
பாதம் போற்றி எல்லோரும்
கேளுங்கள் இன்பமுடன் இந்தச்
சோபனத்தை, காது கொடுத்துக் கேளுங்கள்
கவலைகள் அண்ணியிலே
பொன்னும் முத்தும் கோடிச்சு
புதுமையாக வாழ்ந்த ஊரை
கிள்ளி பழுத்து வாழ்ந்திருந்தார்
கீர்த்தியான தென் திருப்பேரை
கேள்வியில்லை என்று சொல்லி
கெருக்க வந்தான் துலுக்கனவன்
ஊர்தோறும் திருடிக் கொண்டு
ஓடி மறைந்து திரிந்தானும்
தெய்வப் பொருளைத் திருடிக் கொண்டு
தென் திருப்பேரையை நாடி வந்தான்
குதிரையின் மேல் அவன் ஏறிக் கொண்டு
குன்று மணலில் வரும் போது
குதிரைக்குக் கண்கள் தெரியாமல்
தனக்கும் கண்கள் தெரியாமல்
தயங்கி திகைத்து நின்றானும்
பச்சை துலுக்கனை கண்ணைக் கெடுத்து
பாளையங் கோட்டை பரக்கடித்து
வந்த துலுக்கனை மாறியடித்து
மணலுக்கப்பால் துரத்தி விட்டார்.
அப்படிப்பட்ட பெருமாளை நாங்கள்
ஆதரவாகவே கை யெடுப்போம்
முந்தி துலுக்கனை கண்ணை கெடுத்ததை
மூதாக்கள் சொல்லி கேட்டிருக்கிறோம்
இப்போது கோவிலில் திருடர் வந்ததை

யாவரும் அறியக் கண்டிருக்கோம்
ஐப்பசி மாதம் குழைக் காதர்க்கு
அன்புடன் ஊஞ்சல் திருநாளில்
அங்கியுடன் ஆபரணங்கள்
அணிந்து தேவிமாரோடிருக்க
கோல ஜனங்கள் கவரி வீசும்
கூடு திருப் புனல் பேரையர்க்கு
நாள் கதிர் சாத்த வேணு மென்று
மெம்பர் எல்லோருமாய் வைத்திருந்தார்
பாதி ராத்திரி வேளையிலே
யாவரும் நித்திரை செய்கையிலே
கோவில் புகுந்து கொள்ளையடிக்க
கூடியெல்லாருமா உட்புகுந்தார்
பார்த்தார் அந்த திருடரெல்லாம்
பல்லணி வழியா சேர்வகைகளை
எவ்வித மாலும் சுவாமி
தூக்கி எடுத்துப் யோக மனதில் எண்ணி
கடப்பாறைகம் பிதானெடுத்து
கல் பல்லாணியை வெட்டலுற்றார்
போட்ட கடப்பாறை அசைக்கமாட்டாமல்
பிரமித்து நின்றார் திருடரெல்லாம்
கொடிய பாவிகள் கதவில்
தீப்போட்டு கோவிலில் வரவழி பார்த்தார்
அவர்கள் கொணர்ந்த சாமானை
எல்லாம் அந்த அந்த இடத்திலே
வாங்கி வைத்தார்.
அரை வேஷ்டி முதல் வாங்கி வைத்து
அடித்து அப்பால் துரத்தி விட்டார்
அந்த நாளையில் கேட்டதுண்டோ
இந்த புதுமைகள் கண்டதுண்டோ
எங்கள் மகர குழையருக்கு
ஈடு எங்கெங்கும் தெய்வங்கள் பார்த்த துண்டோ
கலியுலகத்திலே யாவருக்கும்
கண் கண்ட தெய்வமாயி இருக்கார்
கூடியே மகா ஜெனங்க ளெல்லாம்

கோவில் என்று ஓடி வந்தார்
வந்து கோவில் பார்க்கும் போது
பார்த்தார்கள் அந்த ஸன்னதியில்
பல விதமான சாமான்களைக்
கத்தியிலே ஆயிரமாம்,
மண்வெட்டி கொபிலி ஆயிரமாம்
கடற்பாறை கம்பி ஆயிரமாம்
கன்னக் கபாச உரிகன் ஆயிரமாம்
பயத்து மூட்டையில் ஆயிரமாம்
சால்வைலேஞ்சிகள் ஆயிரமாம்
சரிகை வேஷ்டி ஆயிரமாம்
திருடர் கொணர்ந்த சாமான்களை
எல்லாம் சேர்த்தெடுத்து
வைத்துக் கொண்டு சமரசனைகள்
சுவாமிக்குப் பண்ணி சந்தோஷமாய் வாழ்ந்திருந்தார்.

## 8-வது கட்டம்

சீராக வாழ்ந்திருந்தார் எல்லாரும்
சிறப்பாகயிருக்கிற நாளையிலே
கோவிலும் மடம்புளியும் கட்ட கூடிய
மகா ஜனங்கள் யோசனை பண்ணி
தாங்களெல்லாம் சம்மதித்து
தர்மகர்த்தா ராமசந்திராஐயங்கார் இடத்தில்
சொன்னார்
நற்குணம் பொருந்திய தர்மகர்த்தா
ராமசந்திராஐயங்காரும் ஏதுரைப்பார்
அப்படியே ஆகட்டும் என்று
அன்பாம் அநேகம் வேதியரை அழைக்கச்
சொன்னார்
நாள் பார்த்து முகூர்த்தம் வைத்தார்.
எல்லோரும் நல்லதொரு
லக்னமும் பார்த்து வைத்தார்
ஆவணி மாதத்தில் அருமையாய்
ஐந்தாம் தேதி வெள்ளிக் கிழமையிலே
அழகாக நாள் பார்த்தார்

சொக்கலிங்க முதலியா
மணியரார் சுடுக்காக
கொத்த மிரை அழைத்து வந்தார்
சாத்துப் பொடி வெற்றிலை பாக்கு
சடுதியில் சந்தோஷமாகவே எடுத்துக்கொண்டு
மங்களமாய் மடப்பிளிக்கு
இந்த மகா ஜனங்களும் கால் நிறுத்தினார்
வரி கல்லுக்குப் பணம் கொடுத்தார்
அப்போது மங்களமா ஜனங்களெல்லாம்
சாரங் கெட்ட பனைகள் வெட்டி
சடுதியில் சந்தோஷமாகவே நூற்றெண்படும்
பிள்ளை குழாவிளையாட்ய்
இந்த பொது ஜனங்கள் கல்லிமுத்தார்கள்
கல் தச்சமார் ஒரு புறமாம்
அதிலே கமாள தச்சர் மறுபுறமாம்
கொல்லமார் ஒரு புறமும்
கொத்தமார்களெல்லாம் இரு புறமாம்
கல கல குலு குலுன எல்லோரும் கலந்து
ஆவன வேலைகள் செய்தார்
மடப்புளி கட்டி முடித்தார்
அப்போது மங்களமாய்
மகா ஜனங்களெல்லாம்
திருப்பணிகள் செய்து முடித்தார்.

## 9-வது கட்டம்

சீரான சிரத்தையுடன் ராமசந்திரஐயங்காரும்
திருப்பணிகள் செய்து முடித்தார்
அழகாக குழைக்காதருக்கு
அங்கி சாத்த வேணுமென்று
சீராகவே குழைக்காதருக்குக்
கவசம் சாத்தனார் சிரத்தையுடன்
பதிஷ்ட பண்ண வேணுமென்று
பக்தியுடன் நூற்றென்பரும்
நாச்சியாரைப் பதிஷ்டை பண்ணினால்
நன்மையுண்டாம் நமக்கென்று சொல்லி

தாயாரைப் பதிஷ்டை பண்ணி
சகல ஜனங்களும் தான் நினைத்து
வரி யெடுக்க வேணுமென்று சொல்லி
மங்களமாய் மகாஜனங்களுமெல்லாம்
எக்கார் வீதம் வரியெடுத்தார்
இன்பமுடன் எல்லோரும்
எண்ணி கனக சதங்கை இல்லாமல்
ஏத்தம் பண்ணினார் எல்லோரும்
சித்திரை மாதத்தில்
திங்கள் கிழமை பூசத்தில்
பரிவுடனே பன்னிரண்டாம் தேதி
பதிஷ்டை பண்ணினார் பக்தியுடன்
பதிஷ்டை பண்ணி நாள் முதலாய்
பரிவுடனே வாழ்ந்திருந்தார்
யாதொரு குறையும்
யாவருக்கும் இல்லாமல்
நன்மையாக வாழ்ந்திருந்தார்
தேசாதி தேசங்களில்
தீவுகரிவுகள் வந்தாலும்
எந்த குழப்பங்கள் வந்தாலும்
எங்கள் நாச்சியார்
தஞ்சமென்பாம் தாயாரே தஞ்சமென்று
சகஸ்ரநாம ஜெபங்கள் வைப்போம்
பெருமாளே நீர் தஞ்சமென்று
சொல்லி பேர் பேராய் நாங்கள்
சிறப்பு வைப்போம்.

## 10-வது கட்டம்

ஆற்றில் ஜலம் இல்லாமல்
அனேபேரும் தவிக்குகிருள்
குளத்தில் ஜலம் இல்லாமல்
கோடிப் பயிர் தீயறது
இட்டதொரு வெள்ளாமை
எங்கெங்கும் தீயறது

நட்ட தொரு நடுகையெல்லாம்
நாலு திக்கும் வாடாது
வைத்ததொரு பூம்பயிர்கள்
வாடியெங்கும் தீயரது
முளைத்ததொரு மூன்றாம் பாகம்
முளைகளெல்லாம் தீயரது
பூத்திருந்த பெண்களுக்கு
போய் குளிக்க ஜலமுமில்லை
மசக்கை கொண்ட பெண்களுக்கு
மரத்தில் ஒரு பழமுமில்லை
ஆறு வெட்டி ஊத்தெடுத்து
அனைவரும் தவிக்கிறார்
நாச்சியாரும் பெருமாளும்
நன்மையாக எண்ணியவாள்
அகஸ்தியர் திருமலைக்கு.
அன்புடனே எழுந்தருளி
அகஸ்தியரே கேளுமய்யா
அனைவரும் தவிக்கிறார்
அகஸ்தியர் திருவுள்ளத்தால்
ஆற்றில் ஜலம் வரவேணும்
அனைவரையும் ரட்சிக்க
ஆற்றில் ஜலம் கொணர்ந்து விட்டார்
தேவாதி தேவருமாய்
ஜெகத்தை எல்லாம் ஆண்டவரும்
மூவாதி தேவரும்
மூன்றரையடி ஜலம் கொணர்ந்தார்
மேல் வரத்தும் வாராமல்
கீழ் வரத்தும் ஓடாமல்
மத்தியிலே ஜலம் கொணர்ந்தார்
நாச்சியார் மகிமையினால்
கடம்பாக்குளம் பெருக
கவலையற்று நாமிருக்க
கடம்பாக்குளம் பெருகி கார் பிசானம் பயிரோ
செழிக்க எங்கும் மழை பெய்ய
சிறுதானியம் விளைந்து வர
எங்கெங்கும் மழைபெய்ய

எப்போதும் ஜலம் பெருக
மாதம் மூன்று மழை பெய்ய
படாமல் நெல் காண
கட்டி முத்துச்சரம் போல
கதிர் ஒழுக்கு நெல் காண
கோட்டை ஒன்று வராகன் ஒன்ருய்
கொம்பனியான் விலை போட
செருக் கமுடன் குடியேறி
பொது ஜனங்கள் வாழ்ந்திருந்நார்.

## 11-வது கட்டம்

பங்குனி உந்திரத்தில்
பௌர்ணமாசை தன்னிலே
வர்ணன் கொணர்ந்த சொர்ண குடத்தால்
மங்களமாய் வரு ஷிக்க
முக்தியடையும் தீர்த்தமும்
முன்செய்த பாக்கியமும்
பெற்றோமே நாங்கள் இந்த
பெருமாள் கிருபையினால்
கோடி தவம் செய்தவருக்குக்
கூடு திருபுனல் ஸ்தலம் கிடைக்கும்
ஜென் மாந்திர புண்ணியம் பண்ணின பேருக்கு
தென்திருப்பேரை ஸ்தலம் கிடைக்கும்
வந்தார்க்கு பிஷையிட்டு
வருவார்க்கு அன்னமிட்டு
தஞ்ச மென்றார்க்கு தயவு செய்வார்
தர்ம குண நாச்சியார்
தேசாதி தேசங்களில்
சேவிக்க வந்த மானிடவர்
இந்த ஊரு பெருமாளுக்கு
என்னது இச்சையென்றார்
காசு பணம் வாங்க மாட்டார்
களஞ்சியமும் கேட்க மாட்டார்
கூட்டுக்கரையும் அமிர்தகலசமும்

குழைக்காதர்க்கு இச்சை என்றார்
அந்த நாளில் அமிர்த கலசம்
நெய்யிலவான் அமுது செய்வாள்
ஏழை எளியவர்கள் என்ன செய்வார்
என்று சொல்லி
வைக்க பணியாரம் போதுமென்றார்
வானப்பிரானும் அப்போது
சுக்கிரவாரம் வெள்ளிக் கிழமை
திருப்பூரம் தன்னிலே
பரிவுடன் இந்தச் சோபனத்தைப்
பக்தியுடன் சொன்னார்க்கும்
சொல்லு, சொல்லு என்று சொல்லி
•செவி குளிரக் கேட்டார்க்கும்
தாலி தழைத்திருப்பர்
சந்ததிகள் ரொம்ப உண்டாம்
பெருக்க முடன் தயிர் கடைவாள்
யுத்தி ரனைத் தான் பெறுவாள்
ஜன்ம தரித்ரம் நீங்கி — சிந்தையில்கவலை
யற்று, ஜனன மரண மற்று
செழிப்பாக வாழ்ந்திருப்பார்.

## நாராயண தீட்சிதர் சிறையில் இருந்த காலத்தில் உடன் இருந்தவர்கள் பாடிய செய்யுட்களிற் சில.

### வெண்பா

1. கன்றும் பசுவும் கதறாமற் காத்துநெடுங்
குன்றைக் கவித்த குழைக்காதா - இன்றுமுதல்
நாளைக்கு ளெங்களுக்கு நன்மையுறக் காத்தருளிவ்
வேளைக் கிரங்குவதே மெய்.

2. இந்தவினை நீக்கி யிரங்கிக் கடைக்கண்பார்
கொந்தவிழுந் தாமக் குழைக்காதா - இந்துமுக
மண்டலத்தாய் நூற்றெண்மர் வாழ்வே மணிமகர
குண்டலத்தா யெங்களையாட் கொண்டு.

3. தென்றிருப்பே ரைப்பதிக்குத் தீங்கொன்றும் வராமல்
உன்றிருப்பே ரைப்பல்கா லோதினேன்
- மன்றிருபேர்
ஆயிரம் பெற்ற வழகா குழைக்காதா
நீயிரங்கிக் காப்பாய் நிதம்.

4. நெல்லைதனில் வந்த நெடும்பா தகன்விளைத்த
அல்ல றவிர்த்தெம்மை யாண்டருள்வாய்
- நல்லோர்கள்
போற்றுந் திருப்பேரைப் புங்கவா வெவ்வினையும்
மாற்றும் படிக்கருள்செய் வாய்.

5. உற்றசம யத்தி லுதவுந் திருப்பேரைக்
கொற்றவா செம்பொற் குழைக்காதா
- முற்றுமெமைக்
காத்திரட் சிப்பாய் கலங்காம லெவ்வினையும்
தீர்த்திரட் சிப்பாய் தினம்.

6. நம்பினோந்தென்பேரை நாதகுழைக் காதநின்பொற்
செம்பதுமம் போலுநீ திருப்பதத்தை -எம்பெருமான்
எங்கள்பா லோர்தீங்கு மெய்திடா வண்ணமளித்
தங்கணுல கிற்காத் தருள்.

## கட்டளை கலித்துறை

7. தென்பேரை வாழுங் குழைக்காதநின்பொற்
றிருவடிகீழ்ப்
புவிபே யனைய தமியன்விண் ணப்பமேய்ப்
போத நந்து
வன்பே யிடர்தவிர்த் தெஞ்ஞான் மிக்கநல் வாழ்வருளி
உன்பே ரருட்குரித் தாகவைத் தாண்டரு ளுத்தமனே

கண்டாயோ சோதிக் கதிரவனே நீயுமிந்த
மண்டலங்கள் எங்கும்போய் வந்தாயே
- தண்தமிச் - சீர்
கோடாத பேரைக் குழைக்காதர் நன்முகம்போல்
வாடாத செந்தாமரை.

அரசாகி தைமுழுதாண்டாலும் (இ) ன்பக்
கரை சார மாட்டார்கள் காண்டீர் – முரசாரும்
தென்திருப்பேரைப் பதியன் சீர்கெட்டு நானிலவன்
தன் றிருப்பேரைப் புதியாதார்.

— ஸ்ரீ பிள்ளைப்பெருமானய்யங்கார்.

# அபிநவ காளமேகம் ஸ்ரீ அநந்தகிருஷ்ணை-யங்கார் இயற்றிய பாடல்கள்.

## 1- அம்மானை

பூந்துளவன் தென்பேரைப் புங்கவன்மண் மாவலிபால்
ஏந்துகரத்தானு விரந்தனன்கா ணம்மானை
ஏந்துகரத்தானு விரந்தனனே யாமாகில்,
மாந்தர் பெருங் கன்னனென வாழ்த்துவரோ? அம்மானை
வாழ்த்தல் படியளக்க வாய்ந்ததனு லம்மானை.

## 2. திருப் பேரை - விருத்தம்

மருவல ரவுணா மருவலா சொரிய
மறிதிரைப் பரவையின் கண்முன்
திருவனை செய்த திருவனை மார்பன்
சிறந்தநன் மறைபுக வாழி
வருணர்க ளுடனே வருணனும் பணிய
மனைவிய ரோடினி திருக்கும்
பெருமையை யுடைய பெருமைசார் பொழிந்தென்
பேரைமா நகரது மிதுவே!

## திருப்பேரைத்தாயார் பேரில் - வெண்பா

திருப்பேரை விட்டுழுது சீர்ப்பயிர்செல் பண்ணைத்
திருப்பேரை நாயகியைச் சிந்தை — விருப்போடும்
வீறுகவி வாரமதில் மேவித் துதிப்போர்க்கு
மாறிவிடுங் கோரவறு மை.

## குழைக்காதர் பேரில் மும்மண்டில - வெண்பா

மாதவா பேரன்பா மாயா தென்பேரே யில்வாழ்
சீதரவின் மாரனெனுஞ் சேயின்ரேய் — மாதயவாய்க்
சீரியரை நாயேனுஞ் சேர்வான்முன் ஞளினிலிப்
பாரினையுண் வாயாகண் பார்.

## 2-வது பிரிவு

பேரன்பா மாயாதென் பேரையில் வாழ் சீதரவின்
மாரனெனுஞ் சேயின்ரேய் மாதயவாயச் — சீரியரை
நாயேனுஞ் சேர்வான்முன் ஞளினிலிப் பாரினையுண்
வாயாகண் பார்மாத வா.

## 3-வது பிரிவு

மாயா ! தென் பேரையில் வாழ்சீதர! வின் மாரனெனுஞ்
சேயின்ரேய் ! மாதயவாய்ச் சீரியரை — நாயேனுஞ்
சேர்வான்முன் ஞளினிலிப் பாரினையுண் வாயா ! கண்
பார்மாத வாபேரன் பா.

## கீர்த்தனைகள் - 1.

ராகம் : ஆனந்த பைரவி

பல்லவி

எத்தனை அழகு உனக்கு தென்பேரைநாதா
எத்தனை உழகு உனக்கு (எ)

அனுபல்லவி

சித்தம் உன்னைமேல் வைப்போரையும்
தினம் வழி படுவோரையும்
அத்தனை பேரையும் காத்து
ஆதரித்து ஆட்சி செய்யும் (எ)

சரணம்

1. நித்தம் நித்தம் திருமஞ்சனம் — முகில்வண்ணனுக்கு
நித்தம் நித்தம் உற்சவங்களும்
நித்தம் நித்தம் நாடி வந்த நிர்கதிகள் அற்றவர்
உற்றது துணையாயிருந்து உலகையே ரசிக்கும்

2. நன்மையே செய்திடுவார் — நம் குழைக்காதர்
நலங்களையே தந்திடுவார்
அவரையே நம்பி இருக்கும் அன்பர் அடியவர்க்கும்
ஆனந்த வாழ்வு தந்து அனுகரஹித்து காக்கும் (எ)

## பாட்டு - 2.

ராகம் : பைரவி

பல்லவி

இந்த சுந்தரனைபாரடி எந்தன் சிந்த
அகத்தே புகுந்து சிந்திக்கச் செய்யும் அழகன் (இ)

அனுபல்லவி

செந்தமிழ் பாமாலைபூண்டு செங்கதையும் கையில்
சுந்தரி இருவரோடு தோழிக்கிணியில் எழும் தொண்டு (இ)

சரணம்

அந்த மதனோ அல்லது இந்திர தேவன்தானோ
தந்த முகுந்தன் என்னும் நாராயணனும் அவன் தானோ
எங்கள் மனம் கொள்ளை கொண்ட, எழிலோன்
இவன்தானடி
சிந்தை தெளிந்து அறிந்து சொலுகிறோம் தாங்களடி(இ)

சரணம் சரணம் என்று சன்னதியில்
வருவோரைச் சாந்தமாக அனுப்பி சம்பத்தும்
தந்திடுவார் அன்றலர்ந்த தாமரைபோல் அனுதினம்
காட்சி தந்து அபயம் அபயம் என்று அனைவரையும்
காத்து வந்த தென்பேரை மாயவன் அவன் - எங்கள்
சிந்தைக் குகந்த ஜெய சுந்தரவதனன் அம்மா.

## பாட்டு - 3.

ராகம் : கர்நாடக தேவகாந்தாரி

பல்லவி

கண்டோம் கவலைகளைநாம் மறந்தோம் ஐயனை
காணவோர் ஆயிரம் கண்களும் வேண்டுமே (க)

அனுபல்லவி

சாமவேதனாம் ஸ்ரீசக்ரபாணியாம்
கதை சங்கு சக்கரம் கொண்டு சகலரையும் காப்பான் (க)

சரணம்

நம்மாழ்வார் பாடிய நம் திருவாய் மொழியும்
நாவினால் பாடினால் நன்மையெல்லாம் பெருகும்
உண்மைப் பொருளை உலகுக்கு எடுத்துரைக்கும்
உத்தமனாம் மகரக்குழையனின் பாதத்தை (க)

கோவர்த்தனத்தைக் குடையாய் பிடித்தவன்
கோபியர்களுடனே குழல் ஊதிநின்றவன்
மண்ணை வெண்ணை உண்டு மாயம்பல செய்தவன்
மாலவன் மலர்ப் பாதம் மகிழ்ந்து மகிழ்ந்து நாம் (க)

## பாட்டு 4.

ராகம் : சிந்துபைரவி

பல்லவி

எப்படி சொல்வோமையா - உம்மை நாம்
எப்படி காண்போமையா ?

அனுபல்லவி

எந்தவினை வந்தாலும் இந்த வினைபோல
ஏங்கி ஏங்கி நாங்கள் ஏக்கம் அடைந்ததில்லை (எப்படி)

சரணம்

குமுறிக் குமுறி அழும் குழந்தைகள் நாமா இல்லையா?
கோடி கோடி செய்த வினை பொருந்தருள வில்லையா
கண்ணில் இரக்கம் கொண்டு கருணை பொழிய வில்லையா
இன்னும் ஏன் சோதனை ஏழை எங்களுக்கருள (எ)

## பாட்டு 5.

ராகம் : கர்நாடக தேவகாந்தாரி

பல்லவி

நிகரில் முகில் வண்ணன் தங்கமே தங்கம்
நிகருக்கு நிகர் யாரோ தங்கமே தங்கம் (நி)

அனுபல்லவி

பன்னகசயனின் பாதம் தன்னை போற்றினால்
பரிவுடன் வேண்டியதை பரிந்து நமக்கருளும் (நி)

சரணம்

ஸ்ரீதேவியும் பூதேவியும் சிரித்தருகில் இருக்க
சிறிதளவின்னலும் நம்மை வந்து அணுகாமல்
பூரணதயவுடனே பொங்கி எழுந்து வந்து
புது வாழ்வு தந்து புனருத்தாரணம் போல (நி)

---

## பாட்டு 6.

ராகம் : ஸ்ரீகல்யாணி தாளம் : ஆதி

பல்லவி

வந்தருள் சக்கரகையனே உயர்வானவர்கள்
ஆதியோர் வணங்கும் அழகை மாயனே
(வந்தருள் இந்தவேளை என்னை காக்க)

## அனுபல்லவி

செந்திருவுடன் அணி திருவை மருவிய
முகுந்தனே ! காரி அழைத்த நந்தனே ! வந்தருள்
இந்த வேளை நீ.

## சரணம்

1. எந்த வேளையும். மனைவி - மைந்தர் - மாடு - மனை
என்று. சிந்தை கலங்கி நடந்த ஐந்தரிந்த, என்னை
பந்தமுற்றவனுக்கி, சொந்தமடியார்களுடன், சந்ததம்
மதிக்க வரம் தந்திடும் சுந்தரா என்முன் வந்தின்

2. வேசி, மனை, தனில், அவள், ஆசையாள்
மருவியுட்ட, நேசப்பணி செய்திட்ட ஸ்வாமி
தொண்டரையும் - தாஸன் என்றுமே
புவிவோர், பூறித்திடவே, அமைத்து
மாசிலா, துலிபமணிகேசவா, இந்த
வேளை நீ.

3. பாலறும் துருவனுடன், ஒலமிட்ட,
பஞ்சாலிக்கும், சீலமில்லா,
சூரன்மகன், (பாகவாகன்) சிந்தை
மகிழ
காலமறிந்த அருள்செய்த நீல
மேகவர்ண லோலனே. அனந்த
கிருஷ்ணன் சீலனே இந்தவேளை நீ (வந்தருள்)

# நாட்டுப் பாடல்கள்

## குழைக்காதர் பள்ளு

### பாட்டு 1.

வானரங்கள் கனி கொடுத்து (மெட்டு)

1. பக்தியாலே நாங்கள் பட்டபாடெல்லாம் போதும்
பரவசம் மிகுந்ததாலே பட்டதெல்லாம் போதும்
உந்தன் சேர்வை காண என்றும் ஆசை
கொண்டோம் நாங்கள்
இதை உணர்ந்தும் நீர் பேசாமலே இருந்த
தேனோ இன்றும்

2. கலியுகத்திலே உந்தனைப்போல் கண்டது
ண்டோ எங்கும்
காட்சியை நாம் கண்டதுமே பூரிக்குமே அங்கம்
எட்டுதிசை முழுதும் உந்தன் பெருமையை
நாம் கேட்டும்
எட்டாத தூரத்திலே இருந்துவிட்டீர் இன்றும்.

3. பார்புகழும் உந்தன் மேனி பச்சை வண்ணம் கண்டும்
பழபழக்கும் மேனியென்றும் அருள் உளமே கொண்டு
பச்சைக் கற்பூரம் மணக்கும் பாங்கானதீர்த்தம்
பல்லோரை வாழ்த்தும் உந்தன் சீர்சடாரி
என்றும் (பக்தி)

---

### பாட்டு 2.

நந்தவனத்தில் ஓர் ஆண்டி (மெட்டு)

மகரக்குழையின் பாதம் - நாம்
மறவோம், மறவோம் மறவோமே நாளும் (ம)

1) எண்ணங்கள் ஆயிரம் கோடி — அது
எப்போது நிறைவேறும் பார்ப்போம் நாம் தேடி (ம)

2) அன்புடன் யாவரும் தொழுதலால் — நாம்
அன்று செய்த பாவம் அப்போதே தீரும்
அருள் வடிவாம் அவர் உள்ளம், அவர்
அன்பைப் பெருவதில் நாம் கொள்ளும் இன்பம் (ம)

3) காணக்கண் கோடியே வேண்டும் — அவர்
காதில் அணியும் மகரக் குண்டலமும்
சொர்க்க வாசல் திருநாளில் அவர்
சொர்ணகலசம் போல் ஜொலித்திடுவாரே (ம)

4) சிவப்பு மத்தாப்பும் வலையும் — அவர்
சேர்வையும் அங்கு கண்டுகளிப்போமே
கொட்டகைக்குள்ளே இருந்து — அவர்
உண்டு பவனி உலாவருவாரே (ம)

## பாட்டு 3.

நிலா நிலா ஓடிவா (மெட்டு)

கண்ணா கண்ணா ஓடிவா கமலக் கண்ணா ஓடிவா
நாங்கள் செய்த வினை போக்கிடவே வாவா (கண்)

தென்பேரை மக்கள் துயர் தீர்த்திடவே வாவா
கருட வாகனத்தில் நீ ஏழுந்து வாவா (க)

தேர்மேலே ஏறிய சிங்காரனே நீ வா வா
வேக மதாய்நீதய வாகவே வா வா (க)

பாமாலைக் கொண்டு நாங்கள் பக்தியுடன் வந்து
பாங்குடனே உன் நாமம் சொல்லிடுவோம் இங்கு
பஜனைகள் செய்திடுவோம் பாங்குடனே ஒன்றி (க)

## பாட்டு 4.

சிட்டுக்குருவி (மெட்டு)

பேரைநகர் வாழ் பெருமானிடம் சேதி கூறுவோம்
பிரியமுடன் ஒன்று கூடி பாடி மகிழுவோம் (பே)

பாசத்தாலே அனைவரும் நாம் பாடி ஆடியே
அவர் பாதங்களைத் தொட்டு நாமும் பூஜைகள்
செய்வோம் (பே)

மலர்களை நாம் சாத்தி அவரை மகிழவைப்போமே
மகிழ்வுடனே ஏற்றிப்புகழை பாடிடுவோமே,
விழி மேல் வைத்தழகை பார்த்திடுவோமே,
அவர் வந்து நம்மை ஆட்கொண்டருள் தந்திடுவாரே (பே)

பிள்ளைக் குழாம் விளையாட்டை கண்டுகளிக்கவே
பேணி அவர் நம்மை என்றும் வாழ வைக்கவே
தர்மர் நெறியில் இருக்க என்று வழியைக் காட்டியே
அவர் நஞ்சம் நஞ்சம் என்று நாமும்
வாழ்ந்திடுவோமே (பே)

---

## பாட்டு 5.

செந்தமிழ் நாடென்னும் (மெட்டு)

தென்னாட்டிலே தென்திருப்பேரையிலே
சித்தம் கொண்டு இங்கு வீற்றிருக்கும்
எங்கள் குழையனின் சிறப்பைப் போற்றியே
ஏற்றம் கொண்டு நாமும் பாடிடுவோம்
சுந்தர பாண்டியன் காலத்திலேயே
சொந்தமுடன் வந்து சேர்ந்தார்
அன்றைய நாள் முதல் இன்றைய நாள்வரை
ஆதரத் தெம்மையும் ஆண்டு வந்தார்
எந்தக் கல்யாணங்கள் வந்தாலும் நாங்கள்
எந்த தேசத்தில் இருந்தாலும்

எங்கள் மகரக் குழையனை எண்ணியே
எப்படியும் சிறப்பு வைத்திடுவோம்
எத்தனை துன்பங்கள் வந்தாலும்
எத்தனை துயரங்கள் வந்திடினும்
அத்தனையும் அவர் அக்கணத்தில் பொடி
ஆக்கிடுவார் துயர் தீர்த்திடுவார்.
நிகரில் முகில் வண்ணன் நெஞ்சத்தில் புகுந்து

நித்தமும் நம்மையே ஆட்டிவைப்பார்
அத்தனையும் பொய் ஆக்கிடாமல் இன்னும்
ஆதரித்தெங்களை காத்தருளும்.

## பாட்டு 6.

கிளிக்கண்ணி (மெட்டு)

தென்திருப்பதியில் வாழும்
தென்திருப்பேரை நாயகி பாதம்
தெம்புடனே நாம் தொழுதால் கிளியே
ஜெயம் நமக்கே கிடைக்கும்

(1) சுக்ர வாரம் தன்னிலே
சொந்தமுடன் நம் நாயகி
ஜோராக கொலுவிருப்பாள் — கிளியே
சொகுசாக கொலுவிருப்பாள்.

(2) மகரக் குண்டலம் அணிந்த
மகர நெடுங்குழைக்காதரின்
மாட்சி பொருந்தியதாய் நமக்கெல்லாம்
மகிழ்ச்சி அருளிடுவாள்

(3) கனுத்திருநாளில் அவள்
கலையெல்லாம் மறக்க
காட்சியை தந்திடுவாள் — தொழும்
கழிப்புடனே மகிழ்வோம்

(4) சாற்றுமுறை திருநாளில்
நாயகனைச் சோதித்த
நங்கையவள் பாதத்தை — கிளியே
நாமெல் லோரும் வணங்கிடுவோம்.

(5) பேரா புரிநாயகியும் திருப்பேரை நாயகியும்
தேச மெங்கும் புகழ் பரப்பி — கிளியே
ஜெயமதை நமக்களிப்பாள்.

## மங்களம்

1. கண்ணனுட சன்னதியில்
கலியன் சுவாமி எழுந்தருளி
நற்றகர் நவ திருப்பதி
பிரசாதம் கொண்டெழுந்தருளி
பட்டர்பிரான் ஸ்வாமி பணிந்து
சட்டமாய் அமர்ந்து நிற்க
அரங்க நகர் அப்பன் பார்த்து
ஆனந்தமாய் மகிழ்ந்து நின்றார் (மங்)

2. பாரெங்கிலும் சஞ்சரித்து
பக்தர்களை சீர்திருத்தி
பக்த பரி பாலருட
சித்தடி பணிந்து நின்றார்
உத்தமி தென்திருப்பேரை
நாயகி மனமகிழ்ந்து
உன்னதமாய் அன்னதானம்
பண்ணின வேதியர்கட்கும் மங்களம்
திருப்பேரை நாயகிக்கும் மங்களம்.

## நூலாசிரியர்



**திருமதி பத்மஜா அனந்தராமன்** எம ஏ
ஆங்கிலப் பேராசிரியர்
ம. தி. தா. இந்துக் கல்லூரி
பேட்டை, திருநெல்வேலி - 10